# திருக்கோயில்

"என் கடன் பணி செய்து கிடப்பதே"






ஸ்ரீ சக்திவிநாயகர், செங்கற்பட்டு.

மாலை 13] விரோதி கிருது-வைகாசி-ஜூன்-1971 [மணி 9

தமிழ் நாடு அரசின் அறநிலய
ஆட்சித்துறை வெளியீடு





திருக்கழுக்குன்றம் வேதகிரீசுவரர் கோயிலின் திருப்பணித் துவக்க விழாவில்
தமிழக முதல்வர் மாண்புமிகு கலைஞர் திரு மு கருணாநிதி அவர்கள்
கலந்து கொண்டு சிறப்பித்தல் (29—4—71)

## பொருளடக்கம்



## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

ஆண்டுச் சந்தாரூ. பத்து மட்டும் தனிப்பிரதி விலை ரூ. ஒன்று மட்டும்

'திருக்கோயில்' இதழின் சந்தாதாரர்கள் ஆகச் சேர விரும்புபவர்கள் "திரு. ஆணையர் அவர்கள், அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-34" என்னும் முகவரிக்கு ரூபாய் பத்து அனுப்பி எப்போது வேண்டுமாயினும் சந்தாதாரர்களாகச் சேர்ந்து கொள்ளலாம்.

அல்லது, அவ்வவ் வட்டார அறநிலைய உதவி ஆணையாளர்களின் அலுவலகங்களிலும் மேற்படி சந்தாத் தொகையைச் செலுத்திச் சேரலாம்.

சந்தாதாரர்கள் தங்களுடைய சரியான முழு முகவரியைத் தெரிவித்துதவுதல், இதழ்கள் தவறுமற் சேர்வதற்கு மிகவும் இன்றியமையாதது.

—ஆசிரியர்




மாலை 13 | விரோதிகிருது — வைகாசி — ஜூன், 1971 | மணி 9

# சீர்காழியில், திருமுலைப்பால் திருவிழா*

( ந. ரா. முருகவேள், M. A., M. O. L., )

**முன்னுரை :**

திருஞானசம்பந்தர் சைவ உலகின் தனிப் பெருந் தலைவர். சைவச் சமயச் சான்றோர்களாகப் பலர் விளங்கியிருப்பினும், அவர்களிலெல்லாம் திருஞானசம்பந்தப் பெருமானே, தனிப் பெருஞ் சிறப்பும் முதன்மையும் மிக்குடையவராகப் போற்றப்படுகின்றார். தமிழகத்திலுள்ள சைவ மக்கள் அனைவருக்கும், திருஞானசம்பந்தப் பெருமானார் தன்னிகரற்ற தனித் தலைமைப் பெருஞ்சான்றோர் எனத் திகழ்கின்றார். அவரது திருப்பாடல்கள் வேதத்தைப் போலவே, ஒப்புயர்வற்ற பெருஞ் சிறப்பும் மேன்மையும் புனிதமும் வாய்ந்தனவாகும்.

சம்பந்தப் பெருமானைப் போற்றிப் புகழாத தமிழ்ச் சைவச் சான்றோர்கள் ஒருவரும் இலர். அப்பர் சுந்தரர் போன்ற, பண்டைப் பெருஞ் சான்றோர்கள் முதலாக, அண்மைக்காலப் புராணநூல் ஆசிரியர்கள் பற்பலர் ஈறாக, வாழையடி வாழையாக வந்த சான்றோர்கள் அனைவரும் திருஞான சம்பந்தரைப் புகழ்ந்து போற்றி வணங்கியுள்ளனர்.

---

* சீர்காழியில் நிகழ்ந்த திருமுலைப்பால் விழாவில், தருமையாதீன குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் திருமுன்னிலையில், அவர்களின் அருளாணைப்படி நிகழ்த்திய சொற்பொழிவினைத் தழுவியது (30—4—71). —ஆசிரியர்.



வேதாந்த வித்தகராகிய தத்துவராயர், சகலாகம பண்டிதர் எனத் திகழ்ந்த அருள் நந்தி சிவாச்சாரியர், வீர சைவ வியன்பெரும் கவிஞர் ஆகிய சிவப்பிரகாசர், உருவ வழிபாட்டினும் குரு வழிபாட்டில் மிகவும் ஈடுபாடு கொண்ட கண்ணுடைய வள்ளலார், திருப்புகழ் பாடிய அருணகிரிநாதர், சமரச சன்மார்க்க ஞானச் சான்றோர் ஆகிய இராமலிங்க அடிகளார் போன்ற இப்பெருமக்கள் எல்லோருமே, திருஞான சம்பந்தப் பெருமானை மிகவும் புகழ்ந்து போற்றி, அன்புடன் வழிபடுதலில் ஒன்றுபட்டு விளங்குகின்றனர்.

### வரலாறு

இத்தகைய பெருஞ் சிறப்பு வாய்ந்த திருஞானசம்பந்தர், மூவாண்டுக் குழந்தையாக இருந்தபோது, சீர்காழித் தலத்தில், பிரம தீர்த்தம் என்னும் திருக்குளத்தின் கரையில், பார்வதியும் பரமேசுவரனும் ஆகிய அம்மையப்பரால், சிவஞானப் பால் ஊட்டப் பெற்றார். அதுபோது, அவர்தம்மை அருந்தவத்தால் ஈன்றெடுத்த பெருந்தகை ஆகிய சிவபாத இருதயர் என்னும் தந்தையார், திருஞான சம்பந்தராகிய தமது மூவாண்டுச் சிறு குழந்தை பாலுண்டு நிற்றலைக்கண்டு, ''யார் அளித்த பால் அடிசில் உண்டனை நீ?'' என வெகுண்டார். ''எச்சில் மயங்கிட உனக்கீது இட்டாரைக் காட்டுக'' என்று, தமது கையில் சிறியதொரு கோல்கொண்டு அச்சுறுத்தி ஓச்சினர். அப்போது சிறிய பெருந்தகையாராகிய திருஞான சம்பந்தர், ஆனந்தக் கண்ணீர் செரிந்து, 'உச்சியினில் எடுத்தருளும், ஒரு திருக்கைவிரல் சுட்டி, எம்மை இது செய்தபிரான்இவனன்றே' எனப் பிரமபுரம் எய்தினர் தம்மை அடையாளங்களுடன் சாற்றினர். அங்ஙனம் சாற்றியருளியதே 'தோடுடைய செவியன்' எனத் தொடங்கும் தேவாரத் திருப்பதிகமாகும்.

### திருமுலைப்பால் திருவிழா :

இங்ஙனம் இற்றைக்குச் சுமார் 1300 ஆண்டுகளுக்கு முன்னர்த் திருஞான சம்பந்தப் பெருமான் சிவஞானப்பால் உண்டதும், அதன் பயனாகத் 'தோடுடைய செவியன்' எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடியருளியதும் ஆகிய அருள் நிகழ்ச்சியினை விளக்கும் முறையில், அவ்வருள் நிகழ்ச்சியின் நினைவாகக் கொண்டாடப் பெறுவதே, ''திருமுலைப்பால் திருவிழாவாகும்''. இவ்வருள் நிகழ்ச்சியின் வரலாற்றை ஆசிரியர் சேக்கிழார் பெருமான், தமது பெரிய புராணத்தில் மிகவும் திறம்பட ஆராய்ந்து செவ்விதின் விளக்கியருளியிருக்கின்றார்.

ஆயினும், பேராசிரியர் மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளை அவர்கள், ''திருஞான சம்பந்தர் கால ஆராய்ச்சி'' என்னும் தமது, அரும்பெறல் ஆராய்ச்சி நூலின்கண், 'தோடுடைய செவியன்' என்னும் தேவாரத் திருப்பதிகத்தில், திருஞான சம்பந்தர் சிவஞானப்பால் உண்ட அருள் நிகழ்ச்சிச் செய்திக்கு உரிய சான்று எதுவும் காணப்படவில்லை, என்று தமது ஐயம் தோன்றக் குறிப்பிட்டுள்ளார்*. சிவநெறிப் பற்றும் செந்தமிழ்ப் புலமையும் மிக்குத் தெய்விகப் பண்பு நலங்களிற் சிறந்து திகழ்ந்திருந்த, பெருஞ்சான்றோர் ஆகிய பேராசிரியர் திரு. சுந்தரம்பிள்ளை அவர்கள்தாமே, இங்ஙனம் ஐயுற்றுக் குறிப்பிட்டுச் சென்றிருத்தலின், அது பற்றி நாம் இங்கு ஒருசிறிது ஆராய்தல் நலம் பயக்கும்

### சேக்கிழார் :

சீர்காழியில் திருமுலைப்பால் திருவிழா, ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்களின் அருளாட்சியிலும், திருமுன்னிலையிலும், மிக்க பெருஞ்சிறப்புடன் கொண்டாடப்பெற்று வருகின்றது. இவ்விழாவிற் பல்லாயிரக்கணக்கான மக்கள் கலந்துகொண்டு தரிசித்து மகிழ்ந்து பயன்பெறுகின்றனர். இன்று போலவே, தொன்றுதொட்டு இவ்விழாவைத் தரிசித்துத் தமிழ்ச் சைவப் பெருஞ் சான்றோர் பலரும் மகிழ்ந்து வந்தனர் என்று தெரிகின்றது. இவ்வருள் நிகழ்ச்சியினை மிகவும் சிறப்பாக விவரித்து விளக்கியருளியுள்ள சேக்கிழார் பெருமான், இற்றைக்கு ஏறத்தாழ 800 ஆண்டுகளுக்கு முன்னர், இவ்விழாவைத் தரிசித்து மகிழ்ந்திருப்பாரெனத் துணிந்து கூறலாம்.

---

* "The hymn still exists, and is the very first of the compilation called Devaram, but it seems to give no support to the miracle narrated"

—Prof. P. Sundaram Pillai. M. A. etc., The Age of Tirugnana Sambandha, p, 6.

**நம்பியாண்டார் :**

அங்ஙனமே ஆசிரியர் சேக்கிழார் பெருமானுக்கு முற்பட்டு விளங்கியிருந்தவரும், சேக்கிழார் பெருமான் பெரியபுராணம் இயற்றுவதற்கு அடிப்படையாக அமைந்த 'திருத்தொண்டர் திருவந்தாதி'' என்னும் நூலைப் பாடியருளிய வரும் ஆகிய நம்பியாண்டார், இத் திருமுலைப் பால் விழாவினை, இற்றைக்குச் சற்றேறத்தாழ 900 ஆண்டுகளுக்கு முன்னர்த் தரிசித்து மகிழ்ந் திருப்பார் என்னத் தடையில்லை. ஏனெனில் திருஞானசம்பந்தர், ஞானப்பாலுண்ட நிலையில், 'எச்சில் மயங்கிட ஈது உனக்குத் தந்தார் யார்?' என்று அச்சுறுத்தி வினவிய தமது தந்தைக்குத் 'தோடுடைய செவியன்' என்னும் தேவாரத் திருப்பதிகம்பாடி, இவர்தான் என்று சுட்டிக் காட்டிய செய்தியினைக் குறிப்பிட்டுச் சொல்லி, ''இத்தகைய சிறப்புமிக்க திருஞான சம்பந் தரின் திருவருளைப் புகழ்ந்து துதிக்கக் கற்றுக் கொண்டவர்கள், தம்முடைய துயரங்களை எல்லாம் நீக்கிப் போக்கிக் கொள்வர்'' என்று நம்பியாண்டார் நம்பிகள் திருவாய் மலர்ந்து அருளிச் செய்கின்ருர்.

> ''வாட்டுவர் தத்தம் துயரை; வன்
> கேழலின் பின்புசென்ற
> வேட்டுவக் கோலத்து வேதத்
> தலைவனை, மெல்விரலால்
> தோட்டியல் காதன் இவன் என்று
> தாதைக்குச் சூழ்விசும்பிற்
> காட்டிய கன்றின் கழற்றிறம்
> ஆனவை கற்றவரே''

என்பது, நம்பியாண்டார் நம்பிகளின் நல்ல திருப்பாடல். இதன்கண் திருஞானசம்பந்தர் ''வேதத் தலைவனை மெல்விரலால் காட்டினுர்; தாதைக்குக் காட்டினுர்; சூழ் விசும்பில் காட்டி னுர்; தோட்டியல் காதன் இவன் என்று காட்டி னுர்'' என்றெல்லாம், நம்பிகள் விளக்கி நுவன்றுள்ளமை காணலாம். 'கன்று' என்ற சொற்குறிப்பினுல், திருஞான சம்பந்தர் மிகச் சிறிய இளங் குழந்தையாக, மூவாண்டு அகவை யினராக இருந்தமை புலப்படுத்தப்பட்டது. சிவஞானப்பால் உண்டமையினுல், அவர் சிவ மாம் தன்மைப் பெருவாழ்வு பெற்றுத் தெய்விக நிலையிற் சிறந்து திகழ்ந்தனர் என்பதும், அவ ருடைய திருவடிகளைப் புகழ்ந்து வணங்குதல்நம் முடையதுன்பங்களை எல்லாம் போக்கி, நமக்கு இன்பங்களை எல்லாம் நல்கும் என்பதும், ''கன் றின் கழற்றிறம் ஆனவை கற்றவர் தத்தம் துயரை வாட்டுவர்'' என்பதனுல் இனிது அறி வுறுத்தப்பெற்றன. இதனுல், இற்றைக்கு ஏறத் தாழ 900 ஆண்டுகளுக்கு முன்னர், நம்பியாண் டார் நம்பிகளும், இத்திருமுலைப்பால் விழா வினைத் தமது காலத்திற் பலமுறை தரிசித்து மகிழ்ந்திருப்பார் என, நாம் தெளிந்து கொள்ளு தல் கூடும்.

**பட்டினத்தார் :**

நம்பியாண்டார் நம்பிகளுக்கு மிக முற் பட்டவர் பட்டினத்தார். அவர்தம் இயற்பெயர் திருவெண்காடர் என்பது. அக்காலத்தில் பட் டினம் எனச் சிறப்புற மதித்துப் போற்றப் பெற்றுவந்த காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்து கப்பல் வாணிபம் புரிந்துவந்த பெருஞ் செல்வ ராதலின், அவருக்குப் பட்டினத்தார் என்னும் சிறப்புப்பெயர் வழங்குவதாயிற்று. திருவெண் காடும், காவிரிப்பூம்பட்டினமும் சீர்காழிக்கு அருகிலுள்ள சிறந்த சிவத்தலங்கள். ஆதலின் பட்டினத்தார் திருவெண்காட்டிலிருந்த போதும், பிறகு காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்து வந்தபோதும், அடிக்கடி அவ்வப் போது சீர்காழிக்குப் போந்து சிவதரிசனம் செய்யும் இயல்புடையவராக இருந்தனர் எனத் தெரிகின்றது. தாம் தோன்றிய திருவெண் காடும், வாழ்ந்த காவிரிப்பூம்பட்டினமும் ஆகிய இரண்டுமே சிறந்த சிவத்தலங்களாகும் எனி னும், அவர் சீர்காழியின்பால் எல்லையற்ற ஈடு பாடு கொண்டிருந்தார். அதற்குத் திருஞான சம்பந்தர் தேவாரத்தில், அவர் கொண்டிருந்த அளவற்ற அன்பும், அவரை ஆட்கொண் டருளிய சீர்காழிப்பிரமபுரீசுவரர்பால் அவருக்கு ஏற்பட்ட எல்லையற்ற பக்திமையுமே காரணம் எனலாம். இற்றைக்கு ஏறத்தாழ 1000 ஆண்டு களுக்கு முன்னர், நம்மைப்போலவே, சீர்காழித் திருமுலைப்பால் திருவிழாவினைப் பட்டினத்

தடிகளார் தாமும் தரிசித்து மகிழ்ந்திருப்பார் எனத் தெரிகின்றது. சீர்காழியில் எழுந்தருளி விளங்கும் பிரமபுரீசுவரப் பெருமானைக் குறித்து அவர் இயற்றியருளிய "திருக்கழுமல மும்மணிக் கோவை" என்னும் சிறந்த நூலின் முதற் செய்யுளிலேயே, பட்டினத்தார், இத்திருமுலைப்பால் விழா அருள் நிகழ்ச்சியினை இனிதெடுத்து விளக்கி விவரமாகப் பின்வருமாறு குறிப்பிட்டருளியிருக்கின்றார்.

''தாதையொடு வந்த வேதியச் சிறுவன்
தளர்நடைப் பருவத்து வளர்பசி வருத்த
அன்னயோ என்று அழைப்ப முன்நின்று
ஞான போனகத்து அருள்அட்டிக் குழைத்த
ஆனத் திரளை அவன்வயின் அருள
அந்தணன் முனிந்து தந்தார் யார்என
அவனைக் காட்டுவன் அப்ப வானர்
தோஒ டுடைய செவியன் என்றும்
பீஇ டுடைய பெம்மான் என்றும்
கையிற் சுட்டிக் காட்ட
ஐயநீ வெளிப்பட்டு அருளினை ஆங்கே''

இதன்கண், திருஞானசம்பந்தரைப் பட்டினத்தார் **'வேதியச் சிறுவன்'** என்றும், அவர்தம் இளங்குழவிப் பருவத்தினைத் **'தளர்நடைப் பருவம்'** என்றும் குறிப்பிட்டிருத்தல் காணலாம். சிவபாத இருதயரைத் **'தாதை'** என்றும் **'அந்தணன்'** என்றும் குறிப்பிட்டிருத்தல் கருதற்பாலது. நீரில் மூழ்கி அகமருடண மந்திரம் செபித்துக் கொண்டிருந்த தந்தையைக் காணுமல் ஞான சம்பந்தராகிய குழந்தை, பசியின் வருத்தத்தால் அம்மே அப்பாஎன்று அழைத்து அழுததனை "வளர்பசி வருத்த அன்னயோ என்று அழைத்தார்" எனப் பட்டினத்தார் சுட்டியிருத்தலும், உன்னியுணர்தற்குரியது.

ஞானசம்பந்தராகிய குழந்தை அழுத நிலையில், இறைவன் அம்பிகையுடன் வெளிப்பட்டுத் திருமுலைப்பாலுடன் சிவஞானத்தைக் குழைத்துத் திரட்டி அளித்த நிகழ்ச்சி, ''முன்நின்று ஞான போனகத்து அருள்அட்டிக் குழைத்த ஆனத்திரளை அவன் வயின் அருள'' என்னும் வரிகளால் விவரிக்கப்பெற்றுள்ளமை, அறிந்து மகிழற்பாலது.

பின்னர்ச் சிவபாதஇருதயர் 'எச்சில் மயங்கிட உனக்கு ஈது இட்டாரைக் காட்டு' என்று சினந்து வினவிய செய்தி, ''அந்தணன் முனிந்து தந்தார் யார், என அவனைக் காட்டுவன்அப்ப'' என்னும் வரிகளால் புலப்படுத்தப்பெற்றுள்ளது.

இங்ஙனம் தம் தந்தையார் சினந்து வினவிய நிலையிலேயே, சம்பந்தர் 'தோடுடைய செவியன்' என்னும் திருப்பதிகம்பாடி, இறைவனைத் தமது கைவிரலால் சுட்டிக் காட்டினர் என்னும் உண்மை ''வானர் **தோடுடைய செவியன்** என்றும், **பீடுடைய பெம்மான்** என்றும், கையில் சுட்டிக் காட்ட'' என்னும் வரிகளில் தெளிவுறவிவரிக்கப் பெற்றிருக்கிறது. இவ்வாற்றன் இத்திருமுலைப்பால் விழா நிகழ்ச்சியினை, பட்டினத்தடிகளும் பலகால் தரிசித்து மகிழ்ந்தனராதல் வேண்டும் என்னும் உண்மை, நாம் நன்கினிது அறிய வெளிப்படுகின்றது.

**சம்பந்தர் அகச்சான்று :**

மேலே எடுத்துக் காட்டிப் போந்த சான்றோர் பெருமக்களின் தகவுரைகளினல், திருஞானசம்பந்தர் சிவஞானப் பாலுண்ட திருவருள் நிகழ்ச்சி, செவ்விதின் தெளியப் பெறுகின்றது. இவற்றின்மேலும் மிக்க வலிவுடைய அரிய பெரிய அகச் சான்ருக, தமக்குச் சிவபெருமானும் உமையம்மையும் சிவஞானப்பால் அளித்த திருவருட் செய்தியினை,

''போதையார் பொற்கிண்ணத்து
அடிசில் பொல்லாது எனத்
தாதையார் முனிவுறத்
தான்எனை ஆண்டவன்;
காதையார் குழையினன்;
கழுமல வளநகர்ப்
பேதையாள் அவளொடும்
பெருந்தகை இருந்ததே''

எனவரும் திருப்பாடல் ஒன்றில், திருஞான சம்பந்தப் பெருமானர்தாமே, சிறந்தெடுத்துக் குறிப்பிட்டிருத்தல் அறிந்து இன்புறுதற்குரியது. இதன்கண் தாம் பெற்ற சிவஞானப் பாலமிழ்தினைப் **''பொற்கிண்ணத்து அடிசில்''** என்றும்; சிவபாத இருதயர் சினமுற்று வினவியதனைப் **''பொல்லாது எனத் தாதையார் முனிவுற''** என்றும்;

இறைவன் அம்மையும் அப்பனுமாம் நிலையில் ஆட்கொண்டனன் என்பதனை ''பேதையாள் அவளொடும் காதையார் குழையினன் தான் எனை ஆண்டவன்'' என்றும்; திருஞானசம்பந்தப் பெருமான் குறிப்பிட்டருளித் திருவாய்மலர்ந் திருத்தல், இவ்வருள்நிகழ்ச்சியின் வரலாற்றுண் மைக்குச் செவ்விதிற் சான்று பகர்கின்றது.

**ஆதிசங்கரர் :**

திருஞான சம்பந்தர் அம்பிகையின் திருக் கரத்தாற் சிவஞானப் பால் ஊட்டப்பெற்ற திருவருள் நிகழ்ச்சியின் அருமை பெருமையினை,

''தருண மங்கலை யுனது சிந்தை
தழைந்த பால் அமுது ஊறினல்,
அருண கொங்கையில் அதுபெருங்
கவி அலைநெடுங் கடல் ஆகுமோ?
வருண நன்குறு கவுணியன் சிறு
மதலை அம்புயல் பருகியே
பொருள் நயம்பெறு கவிதை என்றொரு
புனித மாரி பொழிந்ததே''

எனப் பெரிதும் வியந்து, ஆதி சங்கராச்சாரிய சுவாமிகள் அவர்களும், தாம் அருளிய 'சௌந் தர்ய லகரி' என்னும் நூலில் புகழ்ந்து போற்றி மகிழ்ந்து இன்புறுகின்றார்.

**சிவப்பிரகாசர் :**

இவ்வாறே கற்பனைக் களஞ்சியமாய் அற்புதச் சொற்பொருள் நலன்கள் அமையக் கவிபாடும் திறனில் தலைசிறந்து விளங்கிய வராகிய துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமி கள் அவர்களும்,

''பூவான் மலிமணிநீர்ப் பொய்கைக்
கரையின்இயற்
பாவான் மொழிஞானப் பால்உண்டு—
நாவால்
மறித்து எம் செவியமுதாய்
வார்த்தபிரான் தண்டை
வெறித்தண் கமலமே வீடு

எனவரும் நால்வர் நான்மணிமாலைச் செய்யு ளால், திருஞானசம்பந்தர் சிவஞானப் பாலுண்டதுடன், பின்னர் அதனை இவ்வுலக மெல்லாம் உண்டு உய்ந்து ஈடேறும் பொருட்டுத் தமது நாவினாலே மறித்துத்தேவாரம் என்னும் தெய்வப் பேரமிழ்தமாக மாற்றி வழங்கி யருளிய மாட்சிமையினைப் புகழ்ந்து போற்றிச் சிறப்பித்திருக்கக் காண்கின்றோம்.

**முடிவுரை :**

திருமுலைப்பால் விழாத் தரிசித்ததன் பயனை, இப்பாடலாற் சிவப்பிரகாச சுவாமிகள் தெளிவித்தருள்கின்றார் எனலாம். சம்பந்தர் உண்டது பால்; அவர் நமக்கு அளித்ததோ தேவாரம் ஆகிய தெய்வ அமிழ்தம். ஆதலின் இவ்விழாவைத் தரிசித்ததன் பயனாகவேனும், இனி நாம் அனைவரும், திருஞானசம்பந்தர் அருளிய தேவாரம் ஆகிய திருநெறிய தமிழ் ஓதித் தெய்விக நலம் பலவும் எய்தி, உய்ய முயலுவோமாக!

—ஆசிரியர்.

---

வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத,
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு, திருத்தொண்டு பரவுவாம்

—சேக்கிழார்.

# தோடுடைய செவியன்

தோடுடைய செவியன் விடையேறி
ஓர் தூ வெண் மதிசூடி
காடுடைய சுடலைப்பொடி பூசிஎன்
உள்ளங்கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாட்
பணிந்தேத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுரம் மேவிய
பெம்மான் இவன் அன்றே

திருஞான சம்பந்தப் பெருமான் முதன் முதலாகப் பாடியருளிய திருப்பாடலாகவும், சைவத் திருமுறைகள் பன்னிரண்டிற்கும்கூட, அவற்றின் தொடக்கத்தே அமைந்த முதற்றிருப் பாடலாகவும் திகழ்வது, 'தோடுடைய செவியன்' என்னும் தேவாரத் திருப்பாடல். ஆதலின் அத்துணைச் சிறப்பு மிகுந்த இத் தேவாரத் திருப்பாடலின் பொருளை, இயன்ற வரையில் ஈண்டு ஒரு சிறிது காண்போம் :

''தோடு அணிந்த திருக்காது உடையவன். காளை மாட்டின் மீது ஏறி உலா வருபவன். தூய வெண்மையான சந்திரனைச் சூடுபவன். சுடுகாட்டில் உள்ள திருநீற்றைப் பூசிக் கொண் டிருப்பவன். என் உள்ளத்தைக் கவர்ந்து கொண்ட கள்வன். இதழ்கள் பொருந்திய மல ரினன் முற்காலத்தில் வணங்கித் துதித்ததனல் இதுபோது எனக்கு ஞானப்பால் ஊட்டி அருள் புரிந்தவன். சிறப்பையுடைய பிரமபுரம் என் னும் சீர்காழியில் எழுந்தருளி விளங்கும் பெரு மான் ஆகிய இவன் அன்றே, எம்மை இது செய்தான்'' என்பது இப்பாடலின் திரண்ட பொருள்.

1. தோடு—பெண்கள் அணியும் காதணி. குழை என்பது ஆண்கள் அணியும் காதணிக்குப் பெயர். இறைவன் அம்மையும் அப்பனுமாக வந்து காட்சி யளித்துத் தமக்கு அருள் புரிந்த சிறப்புத் தோன்ற, அம்மைக்கு உரிய காதணி யாகிய தோடு பற்றிக் குறிப்பிட்டருளினர். ''தோடுடையான் ஒரு காதில் தூய குழை தாழ'' எனவும், ''தோடு பெய்து ஒரு காதி னில் குழை தூங்க'' எனவும், பிற இடங் களிலும் கூடச் சம்பந்தர் பாடியிருக்கும் திறம் ஈண்டுக் கருதியுணரத் தகும்.

2. அம்மையின் வாயிலாகவே அப்பனின் அருளை அடையவேண்டும். ஆதலின், அது பற்றியும் அம்மையைச் சம்பந்தர் இங்ஙனம் முதற்கண் குறிப்பிட்டுச் சிந்தித்து வந்தித்தார் எனவும் கொள்ளலாம்.

3. இறைவனின் திருவடி முதலிய பல பிற உறுப்புக்கள் இருப்பவும், அவற்றையெல் லாம் முதற்கண் சிறப்பித்துப் போற்ருமல், தாம் பாடத் தொடங்கும் திருப்பாடல்களை இறைவன் தனது திருச்செவியில் ஏற்றருளல் வேண்டும் என விரும்பும் தம் விண்ணப்பம் புலப்படுத்தற் பொருட்டு, முதற்கண் ''தோடு டைய செவியன்'' என இறைவனின் திருக் காதினையே சம்பந்தர் போற்றிப் புகழ்ந் தருளினர். இவ்வுண்மையை ஆசிரியர் சேக் கிழார் சுவாமிகளும், ''தம் பாடல் பரமர்பாற் செல்லும் முறை பெறுவதற்குத் திருச் செவியைச் சிறப்பித்தார்'' எனக் கூறுதல் கொண்டு உணரலாம்.

4. முன்னொரு காலத்தில் சிவபெருமானை அசுவதரன் கம்பளன் என்னும் கந்தருவர்கள் இருவர் இன்னிசை பாடிப் பரவினர். அது கேட்டுத் திருவுளம் மகிழ்ந்த சிவபெருமான், அவர்களின் இன்னிசையை என்றும் கேட்டு இன்புறுதற் பொருட்டு, அக்கந்தருவர்கள் இரு வரையும் காதணியாக மாறச் செய்து, தன் திருச்செவிகளில் அணிந்துகொண்டு அருள் புரிந் தான். கந்தருவர்களின் இன்னிசைப் பாடலுக்கு மகிழ்ந்த சிவபெருமான், தம் இன்னிசைப்

பாடல்களையும் கேட்டு மகிழ்ந்தருளல் வேண்டும் என்ற ஒரு குறிப்பும் ''தோடு உடைய செவியன்'' என்ற இனிய தொடரில் அமைந் திருக்கின்றது.

5. வடமொழி வேதம் 'எழுதாக் கிளவி' எனப்படும். தாம் பாடத் தொடங்கும் தமிழ் வேதம் ஆகிய தேவாரமோ 'எழுதும் மறை'. வேதம் ஓதப் புகுவோர் 'ஓம்' என்று முதற்கண் கூறியே தொடங்குவர். 'மறை முதல்' ஆகிய பிரணவம் உரைத்த பின்னரே வேதம் ஓதுதல் மரபு. இதனை,

''ஓம் என்று மறைபயில்வார்
பிரமபுரத் துறைகின்ற
காமன்றன் உடல்எரியக்
கனல்சேர்ந்த கண்ணானே''

எனச் சம்பந்தரே, பிறிதோர் இடத்திற் குறிப் பிடுகின்றார். ஆதலில் தோடு என்னும் முதல் மொழியில் ஓ(ங்)காரம்* புணர்த்தி யுரைக்கப் பெற்றது. அப்பிரணவநாதமும், சட ஆகாசம் ஆகிய பூத ஆகாசத்தின் அல்லாமல், சிதாகாசம் ஆகிய தகர ஆகாசத்தில் தோன்றும் சுத்த நாதம் ஆதலின், த்+ஒ எனத் தகர மெய் யெழுத்தோடு சேர்த்துக் கூறப்பெற்றது. இக் கருத்தும்,

''எல்லையிலா மறைமுதல், மெய்
யுடன்எடுத்த எழுதும்மறை
மல்லல்நெடுந் தமிழால், இம்
மாநிலத்தோர்க்கு உரைசிறப்ப''

எனப் போதரும் வரிகளில், சேக்கிழார் சுவாமி களால் விளக்கியருளப் பெற்றுள்ளது. தகரம் காயத்திரி மந்திரத்தின் முதலெழுத்து என்பதும் ஈண்டு உணரத்தக்கது.

6. 'விடையேறி' என்பதற்கு 'விடையின் மேல் ஏறுபவன்' எனப் பெயராகவும், 'விடை யின் மேல் ஏறிக்கொண்டு' என வினையெச்சம் ஆகவும், இருவகையிற் பொருள் கொள்ளலாம்.

7. இவ்வாறே 'மதிசூடி' 'சுடலைப்பொடி பூசி' என்பனவும் பெயராகவும், வினை எச்சமா கவும், இருவகையிற் பொருள்தந்து நிற்கும். இவற்றை வினை எச்சங்களாகக் கொண்டால், 'உள்ளம் கவர் கள்வன்' என்னும் தொடரில் உள்ள 'கவர்' என்னும் வினைச் சொல்லைக் கொண்டு முடியும்.

8. இவற்றை வினை எச்சமாகக் கொள்ளா மல் வினையால் அணையும் பெயர்களாகக் கொண் டால் ''மதிசூடி(க்) காடுடைய சுடலைப் பொடி பூசி'' என வல்லொற்று மிகுவதாகக் கொள் ளாமல், ''மதிசூடி, காடுடைய சுடலைப் பொடி பூசி'' என இயல்பாகக் கொள்ளுதல் வேண்டும்.

9. இறைவனை ''உள்ளம் கவர் கள்வன்'' எனக் குறிப்பிட்டருளிய தொடர், மிகவும் சிறப்பும் அருமைப்பாடும் வாய்ந்தது. இறைவனை வடமொழி வேதமும் ''தஸ்கராணும்பதயே நம'' (திருடர்களுக்குத் தலைவனே! வணக்கம்) என விதந்தெடுத்துப் போற்றியது என்பர் அறிஞர். ''உயிர்களுக்கு உடனாய் நின்றும் பசுஞான பாசஞானங்களான் அறியப்படாமை பற்றிக் கள்வன் என்றார்'' என்பது சிவஞான போதப் பேருரை.

இறைவன் உயிர்களுக்கு உடனாய் எஞ் ஞான்றும் பிரிவற நின்றுள்ளானாயினும், அவை கள் அவனது அவ்வியல்பினை உணர்ந்து கொண்டு மகிழும் பேறு பெறுவது, ஞானங் கைவரப்பெற்றுத் தூய பேரின்பநிலை எய்திய பின்னரே யாகலின், ஆளுடைய பிள்ளையார் ஆகிய திருஞானசம்பந்தர் தூய பேரின்பநிலை எய்தப் பெற்றுவிட்டார் என்னும் உண்மை யினை, இச்சிறந்த இனிய தொடர் மலையிலக் கென விளக்கி நிற்கின்றதெனலாம்.

10. 'ஏடுடைய மலரான்' என்பதனை 'ஏடுடைய மலரால்' எனப் பிரித்து உணர்தல் வேண்டும். இங்ஙனம் பிரித்து உணர்ந்தால், திருஞானசம்பந்தர் முற்பிறவிகளில் இதழ்களை யுடைய மலர்களினால் அருச்சித்துப் பணிந்து

---

* 'ஓகாரம்' என்னும் சொல்லே, 'ஓங்காரம்' என வழங்கும். மோதிரம் மோந்திரம் எனவும், புல்பூடு புல் பூண்டு எனவும், கூடு கூண்டு எனவும் வருதல் காணலாம். சொற்கள் இங்ஙனம் வருதலை Nasalisation அல்லது Euphonic Nunnation என மொழி நூலறிஞர் கள் குறிப்பிடுவர்.

ஏத்தியவர் என்றும், அதனுலேயே இறைவன் அவருக்கு இப்பிறவியில் ஞானப்பால் அளித்து அருள் புரிந்தான் என்றும் உண்மையுணரலாம். ஆசிரியர் மெய்கண்டார் தமது சிவஞான போதச் செம்பொருள் நூலில், ''முற்செய் தவத்தான் ஞானம் நிகழும்'' எனத் திருஞான சம்பந்தரையே நினைவுகூரும் வண்ணம் அருளிச் செய்ததும், சேக்கிழார் சுவாமிகள் ''தவ முதல்வர் சம்பந்தர்'' என விதந்து ஓதியதும் பிறவும், இப்பொருளுக்குத் துணை புரியும். ''ஏடுடைய மலரான் — பிரமன்'' எனக் கொண்டு அதற்கு ஏற்பவும் சிலர் பொருள் கூறுவர்.

11. பிரமன் வழிபட்டுப் பேறு பெற்ற காரணத்தால், சீர்காழிக்குப் பிரமபுரம் என்பது பெயர். செய்யுள் அமைப்பு நோக்கி, அது 'பிரமா புரம்' என வந்தது. தாம் பாடிய முதல் திருப்பதிகத்தில், முதன்முதலாகக் குறிப்பிட்டருளிய 'பிரமபுரம்' என்னும் இப்பெயரினையே யாண்டும் முதலாக வைத்துச் சீர்காழிக்கு உரிய பன்னிரண்டு பெயர்களுள் ஒன்றாக ஓதும் நியமம் உடையவர் திருஞான சம்பந்தர். இதனை அவர் பாடியுள்ள திருச்சக்கரமாற்று, ஏக பாதம் முதலிய திருப்பதிகங்களிற் காண லாம்.

12. 'இவன் அன்றே' என்னும் இனிய தொடர், ''யார் அளித்த பால் அடிசில் உண்டது நீ?'' என வினவி ''எச்சில் மயங்கிட உனக்கு ஈது இட்டாரைக் காட்டு'' என்று வெகுண்டு கட்டளையிட்ட சிவபாத இருதயர்க்குத் திருஞான சம்பந்தர் விடைகூறிச் சுட்டிக் காட்டும் முறையில் அமைந்ததாகும். இத் தொடரின் பொருட்குறிப்பு நம்மனோர்க்குச் செவ்விதின் விளங்குற் பொருட்டு ''எம்மை இது செய்த பிரான் இவன் அன்றே'' (அல்லவா) என விரித்துரைத்துக் காட்டி விளக்கி யருள்கின்றார் சேக்கிழார் பெருமான் :-

(13) இப்பாடலைமேலும் நுண்ணிதின் நோக்கினல், பற்பல அரிய பொருள் நலங்கள் அமையக்காணலாம். இதன்கண் இறைவனுக்குரிய ஐந்தொழில்களும், எண்குணங்களும், தசாங்கங்களும் பிறவும் சுட்டப்பெற்றுள்ளன எனப் பெரியோர் கூறுவர். விடையேறியது- படைத்தல்; மதிசூடியது - காத்தல்; சுடலைப் பொடி பூசியது - அழித்தல்; உள்ளம் கவர்தல்- மறைத்தல்: முனை நாள் பணிந்தேத்த அருள் செய்தல் - அருளல்.

(14) தோடுடைய செவி - பேரருளுடைமை; விடையேறி - தன்வயத்தனுதல்; மதிசூடி - முற்றறிவுடைமை: பொடிபூசி - வரம்பிலின்பமுடைமை; உள்ளம்கவர் கள்வன்-இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், தூயவுடம்பினனுதல் இயற்கை உணர்வு ; பிரமபுரம் - அளவிலாற்றலுடைமை; என்னும் எண்குணங்களையும் குறிக்கும்.

(15) இனி இறைவனுக்குரிய தசாங்கங்களுள், பிரமாபுரம் - நாடும் ஊரும்; விடையேறி - கொடியும் ஊர்தியும்: பொடிபூசி - முரசும், படையும்; மதிசூடி - மலையும் ஆறும்; தோடுடைய செவி - தாரும் ; 'உள்ளம் கவர் கள்வன்' என்பது பெயரும் ஆகியவற்றைக் குறிக்கும் எனப் பற்பல அரிய பொருள் நுட்பங்களை ஆன்றோர்கள் கூறுவர்.

இத்தகைய இனிய இணையற்ற பாடலைக் கொண்ட திருஞானசம்பந்தர் தேவாரத் திருப்பதிகங்களை, நாம் அனைவரும் தினமும் நயந்தினிது ஓதி, நலம்பல பெற்று உய்ய முயலுவோமாக !

— ஆசிரியர்



# "ஒன்றென்றிரு; தெய்வம் உண்டு என்றிரு"*

ந. ரா. முருகவேள், M.A,. M.O.L.

முன்னுரை :

''ஒன்றென்றிரு; தெய்வம் உண்டு என்றிரு'' எனச் சான்றோர்கள் அனைவரும், பல் வேறு காலஙகளில், பல்வேறு நாடுகளில், அவ் வப்போது தோன்றி அறிவுறுத்தியுள்ளனர். தெய்வ நம்பிக்கையும், தெய்வ சிந்தனையும், மக்களையெல்லாம் உய்வித்து உய்விக்கும் என்பது, சான்றோர்கள் அனைவரும் தகவுறக் கண்ட உண்மை.

''உபநிடதங்களை அருளிய முனிவர்கள், புத்தர்பிரான், பிளாட்டோ, பிளாட்டினஸ், இல்லால், ஃபைலோ, இயேசு, பவுல், இடைக் காலத்து விளங்கிய இசுலாமிய அருளாளர்கள் ஆகிய அனைவரும், உணர்விலும் உண்மையிலும் 'நீங்கள் கடவுளை வழிபடுங்கள்' என்று நமக்கு அறிவுறுத்துகின்றனர். நமக்கு நாமே இந்த அடிப்படை அறிவைப் புதுப்பித்துக் கொள்வ தன் மூலம், நாம் உலகக் குடிமக்கள் ஆகலாம்; நமக்கு 'யாதும் ஊரே; யாவரும் கேளிர்' என்னும் உயரிய உறவுரிமை உண்மையிலேயே ஏற்படும்''.(1)

இறைவன் ஒருவன் உள்ளமையினைத் தொன்று தொட்டு வாழையடி வாழையாக வந்துள்ள நமது தமிழகத்துச் சான்றோர்கள் பலரும், ஒவ்வொரு வகையில் நமக்குச் செவ் விதில் தெளிவுறுத்தியுள்ளனர்.

தொல்காப்பியர் :

(1) ஆசிரியர் தொல்காப்பியர் தமது பழம் பெரும் நூல் ஆகிய தொல்காப்பியம் என்னும் இலக்கண நூலில், ''பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற்றானும் நில்லா உலகம் புல்லிய நெறித்தே'' எனக் காஞ்சித் திணையினால், உல கத்தின் நிலையாமை இயல்பைக் கூறித் தெய்வம் உண்மை தெளிவித்தருள்கின்றார்.

''வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்'

---

(1) "The seers of the Upanishads and the Buddha, Plato and Plotinus, Hillal and Philo, Jesus and Paul, the mediaeval mystics of Islam, ask us to worship God in spirit and in truth. By renewing ourselves in this fundamental knowledge, we shall find ourselves at home everywhere, citizens of the world, in a very real sense".

—Dr. S. Radhakrishnan,
What I Believe.

*காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகள் அவர்களின் அரு ளாதரவில், உயர்நிலைப்பள்ளி ஆசிரியர்களுக் காகக் காஞ்சிபுரத்தில் நிகழ்ந்த கோடை விடு முறை மதபோதனை வகுப்பில் ஆற்றிய சொற் பொழிவினைத் தழுவியது.

— ஆசிரியர்.

எனவரும் நூற்பாவில், 'வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்' என்னும் தொடரினுல் புண்ணிய பாவங்கள் ஆகிய வினையின் உண்மை. அவற்றினின்று நீங்கி நாம் விடுபட வேண்டிய இன்றியமையாமை; வினையின் தொடர்பால் நாம் அறிவு விளக்கம் பெருமல் இருக்கும் தன்மை; ஆகிய பல செய்திகளைக் குறிப்பிட்டருள்கின்ருர். அம்மட்டோ! இறைவன் நம்மைப் போல வினைவயப்பட்டுக் கட்டுப்பட்டு நிற்பவன் அல்லன்; அவன் அதற்கு அப்பாற்பட்டுத் திகழ்பவன்; அவனது அறிவு மிக மிக விளக்கம் பெற்று மிளிர்வது; அவன் பேரறிவு வடிவினன்; அதனுல் அவன் எல்லாவற்றிற்கும் எல்லோருக்கும் முற்பட்ட, முதற்பெருந் தலைமைப் பொருளாக விளங்குபவன்; என்பன போன்ற பலப்பல தெய்வநல இலக்கணங்களையும் புலப்படுத்தியுள்ளார். அன்றியும்,

''வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழிச் சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே''

என்னும் நூற்பாவினுல், தெய்வ வழிபாடு தேவை என்றும்; நாம் வழிபடும் தெய்வம் நம்மைப் புறங்காத்து நலங்கள் பல விளைவித் தருளும் என்றும், அவ்வாற்ருல் நாமும் நம்மைச் சார்ந்தோர்களும் பழிதீர் செல்வங்கள் பல பெற்று வழிவழியாக நீடினிது வாழலாம் என்றும் பிறவாறும்; தொல்காப்பியர் சுட்டியுரைத் திருத்தல் காணலாம்.

திருவள்ளுவர் :

(2) தெய்வப்புலவர் திருவள்ளுவர் பெருந்தகையும், "எழுத்துக்கள் எல்லாம் அகரத்தை முதலாக உடையன ஆதல்போல, உலகு ஆதிபகவனை முதலாக உடையது, உலகிற்கு முதல்வன் ஆகிய ஆதிபகவன் ஒருவன் உண்டு." எனத் தெய்வமுண்மை தேற்றியருள்கின்ருர். ஆதிபகவன் ஆகிய கடவுளையின்றி ஓர் அணுவும் அசையாது என்பதனை ''வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது'' என்று துணிந்து மொழிந்தருள்கின்ருர். இறைவனை வழிபட்டு, அவனது திருவடிகளைப் புகல்அடைந்தால் அன்றி, நாம் நமது மனக்கவலைகளை மாற்றிப் போக்கிக் கொள்ளல் ஒரு சிறிதும் இயலாது என்றும் உணர்த்துகின்ருர். அறிவொழுக்கப் பண்பு நலங்களில் உயர்ந்தவர்கள் ஆகிய உலகத்தார் உண்டு என்று கூறுகின்ற கடவுளை, இல்லை என்று அழித்துச் சொல்லி மறுப்பவன், மனிதனுக மதிக்கப்படாமல், அலகையாகவே இழித்துக் கருதப் பெறுவான், எனவும் குறிப்பிடுகின்ருர். ஒரு நாட்டின் நலத்திற்கு அரசன் அல்லது தலைவன் ஒருவன் இன்றியமையாமல் இருத்தல் போலவே, உலகின் இயக்கத்திற்கும் நலத்திற்கும் இறைவன் ஒருவன் இன்றிய்மையாதவனுக இருக்கின்ருன் என்பது, திருவள்ளுவர் வற்புறுத்தும் தெளிந்த முடிவு.

''முறை செய்து காப்பாற்றும் மன்னவன், மக்கட்கு
இறை என்று வைக்கப் படும்''

''நிலமக்கள் சால உடைத்தெனினும், தானை
தலைமக்கள் இல்வழி இல்''

என்பன போன்ற திருக்குறள்கள் பலவும், திருவள்ளுவரின் தெய்வக்கொள்கை பற்றிய கருத்துக்களைத் தெளிவுற விளக்கும்.

இளங்கோவடிகள் :

(3) சிலப்பதிகாரம் என்னும் செஞ்சொற் பெருங்காப்பியத்தினை, மூன்று காண்டங்களாகவும், முப்பது காதைகளாகவும் வகுத்து, ஓர் அழகிய கலைக்கோயிலாக அமைத்தருளிய இளங்கோவடிகள், அந்நூலின் தொடக்கத்திற் போலவே, அதன் முடிவிலும் கூட, உலக மக்களுக்கு நலம் விளைவிக்கும் உயரிய சிறந்த உபதேசங்கள் பலவற்றைச் செய்த பின்னரே, தமது நூலினை நிறைவு பெறுத்துகின்ருர். அவ்வுபதேசங்கள், தமது காப்பியத்தின் பயனுகிய கருப்பொருளாக விளங்கும் வகையிலும், உலகத்திற்குத் தாம் அளிக்கும் ஞானச் செய்தி (Spiritual Message) எனத் தக்கவாறு திகழும் வண்ணமும், அவரால் அருளிச் செய்யப்பட்டுள்ளன.

"இதுவரையில் சிலப்பதிகாரம் என்னும் இச்செந்தமிழ்க் காப்பியத்தின்கண், யாம் கூறி வந்த செய்திகளையெல்லாம் தெளிவுறக் கேட்டு வந்த திருத்தகவு உடைய நல்லோர்களே! இது காறும் எம்முடைய இந்நூற் பொருளைக் கேட்ட தன் பயனாக, நீவிர் இனிமேற் பிறர்க்குக் கவலையும் துன்பமும் விளைவித்தலை விட்டொழியுங்கள்! கடவுள் உண்டு என்று நம்புங்கள். கடவுளை உணர்ந்த பெரியோர்களை விரும்புங்கள். பொய் கூறுவதற்கு அஞ்சுங்கள். பிறர் மேற் புறங்கூறுதலைக் கைவிடுங்கள். ஊன் உண்ணுதலை விலக்குங்கள். தவவொழுக்கங்கள் பலவும் மேற்கொள்ளுங்கள். பிறர் செய்த உதவியை மறவாதிருங்கள். தீயவர்களின் தொடர்பினை இகழ்ந்து ஒதுக்குங்கள். பொருள் நிறைந்த அறிவுரைகளை இகழாது ஏற்றுக் கடைப்பிடித்து ஒழுகுங்கள். அறநெறியிற் செல்லும் சான்றோர்களின் திருக்கூட்டத்திற்கு இடைவிடாமற் சென்று பழகுங்கள். பழிநெறியிற் சென்று திரியும் தீயவர்களின் தொடர்பினின்று விடுபட்டுத் தப்பி ஓடி உய்ய முயலுங்கள். பிறர் மனைவியை நெருப்பென நினைத்து அஞ்சுங்கள். துன்புற்று வருந்தும் உயிர்களைக் காப்பாற்றுங்கள். இல்லறக் கடமைகளைத் தவறாது போற்றி ஆற்றுங்கள். பாவச் செயல்களைக் கடிந்து நீக்கிவிடுங்கள். கள்ளும் களவும் காமமும் பொய்யும் ஆகிய குற்றங்களைக் கைவிடுங்கள். அறிவிலிகள் ஆகிய வீணர்களின் தொடர்பை அறவே ஒழித்து விடுங்கள்.

இவ்வுலகத்தில் நம்முடைய இளமையும், செல்வமும், யாக்கையும், ஒரு சிறிதும் நிலையுடையன அல்ல. நமக்கென்று அளவிடப் பெற்றுள்ள வாழ்நாள், குறைந்து கழிந்து ஒழியாமல், ஒருகண நேரமேனும் மிகுதிப்பட்டு நில்லாது. நமக்கு நேரவேண்டிய துன்பங்கள் நேராமல், எவ்வாற்றானும் இடைநெறியில் நீங்கியொழியா. ஆதலால், காலம் உள்ள பொழுதே, அவ்வுலகத்திற்கு,உற்றதுணையாகிய அறங்களைச் செய்து தேடிக்கொள்ளுங்கள். வளம்மிக்க இப்பெரிய உலகத்தில் வாழும் மக்கள் ஆகிய நுமக்கு யாம் கூறும் செய்தி இதுவே" எனக்கூறி, இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரத்தினை முடித்தருள்கின்றார். 'தெய்வம் தெளிமின்: தெளிந்தோர்ப் பேணுமின்' என்று இளங்கோவடிகள் கூறியருளும் உபதேசம், எத்துணை விழுமியது என்று, விளக்கிச் சொல்லவும்வேண்டுமோ?

**சீத்தலைச் சாத்தனார் :**

(4) அணிமிகச் சிறந்த மணிமேகலை என்னும் அரும் பெறற் காப்பியம் பாடிய சீத்தலைச் சாத்தனார், "நாம் நம் தந்தையினையும் தாயினையும் கருதல் அளவை என்னும் அநுமானப் பிரமாணம் (Inference) பற்றியே உய்த்துணர்ந்து கொள்ளுதல் போல, உலகத்திற்கும் கடவுள் ஒருவர் உண்டு என்பதனை அநுமானப்பிரமாணம் கொண்டே கருதியுணர்ந்து கொள்ளுதல் வேண்டும். நம் கண்ணுக்குக் காணப் படாமையினால், நாம் கடவுள் இல்லை என்று சொல்லுதல் ஆகாது என்பது, சீத்தலைச் சாத்தனார் கூறும் தெளிவுரை.

"தந்தை தாயரை அநுமானத்து அல்லது
இந்த ஞாலத்து எவ்வகை அறிவாய்?"

எனவரும் மணிமேகலைக் காப்பிய வரிகளினால், இறைவன் ஒருவன் உளனாதலை நாம் சிந்தித்து அறிதல் வேண்டும் என்னும் செய்தியினைச் சீத்தலைச் சாத்தனார் வற்புறுத்தி விளக்கியிருத்தல் காணலாம்.

**கணியன் பூங்குன்றனார் :**

(5) சங்ககாலப் புலவர்களுள் தலைசிறந்த ஒருவர் கணியன் பூங்குன்றனார் என்பவர். இவ் விருபதாம் நூற்றாண்டில் 'ஒரே உலகம்' (One World) என்பது பற்றிக் கற்பனை செய்து வற்புறுத்திய வெண்டல் வில்கி (Wendell Wilkie) என்னும் பேரறிஞரைப் போல, இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே அத்தகையதொரு பேருண்மையினை 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் இனிய வரியால் விளக்கியருளிய பெருமைக்கு உரியவர், கணியன் பூங்குன்றனார் என்னும் சங்ககாலப் பெரும் புலவரே ஆவார்.

நாம் அறியாவண்ணம் எங்ஙனமெல்லாமோ நம்முடைய வாழ்க்கையினை உருவாக்கிக் கொண்டு செல்லுகின்ற ஏதோ ஒரு பேராற்றல் உள்ளது (2). சிறிதும் முறை பிறழாது செயலாற்றி வருதலின், அப்பேராற்றலை நியதி (முறை) அல்லது ஊழ் என்றே பெயரிட்டு மொழிதலும் தகும். ஒரு தெப்பம் அல்லது புணையானது தனக்கென ஒரு செயலும் இன்றி, வெள்ளத்தின் நீர் ஓடும் வழியே தானும் ஓடுதல் போன்றே, ஆருயிர்கள் அனைத்தும் தமக்கென ஒரு செயலும் இன்றி, தெய்வ ஆணை ஆகிய ஊழ் என்னும் முறையின் வழிபட்டு இயங்கி வருகின்றன. ஞானிகள் அனைவரும் தம்முடைய ஞானக் காட்சியினுற் கண்டுணர்ந்து, இவ்வுண்மையினையே நமக்கு நன்கினிது விளக்கிப் போந்துள்ளனர்.

> ''நீர்வழிப் படூஉம் புணைபோல், ஆருயிர்
> முறைவழிப் படூஉம் என்பது, திறவோர்
> காட்சியில் தெளிந்தனம்...''

எனவரும் புறநானூற்றுப் பாடல் வரிகளால், கணியன் பூங்குன்றனுர் என்னும் புலவர் பெருமான், கடவுள் உள்ளமையினையும், கடவுளின் அருளாணையாகிய ஊழ் (Destiny) என்பதொன்று உண்டு என்பதனையும், மற்றும் பல உண்மைகளையும், விளக்கியிருத்தல் காணலாம்.

**மெய்கண்ட சிவம் :**

(6) சைவசித்தாந்த ஞானப் பேராசிரியர் ஆகிய மெய்கண்டசிவம், காணப்படும் உடம்பைக் கொண்டே காணப்படாத உயிர் என்பதொன்று, உண்டென்று உணர்கின்றேம். அதுபோலக் காணப்படுகின்ற இவ்வுலகத்தைக் கொண்டே, காணப்படாத கடவுள் ஒருவர் உண்டு என்று நாம் உணர்தல் வேண்டும். இவ்வுலகம் அவன் அவள்-அது என்னும் பாகுபாடுகள் உடையதாயும், பல்வேறு வகைத்தாய்ச் சடமாயும், சுட்டி அறியப்படுவதாயும் இருத்தலின், தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழில்களை யுடையதாக இயங்கும். 'செய்வோனை இன்றிச் செய்வினை நிகழ்தல் இல்லை' என்னும் அறிவியல் ஆராய்ச்சி முடிவிற்கு ஏற்ப, இயங்குவதாகக் காணப்படுகின்ற இவ்வுலகம், அவ்வியக்கத்திற்குக் காரணராய்க், காணப்படாமல் நிற்கின்ற கடவுள் ஒருவரை இன்றியமையா நிலையில் வேண்டியே நிற்கும்.

அக்கடவுள், இவ்வுலகத்தில் உள்ள எல்லா உயிர்களுடனும் ஒன்ருயும்-வேருயும்-உடனுயும் நிற்பார். காணும் கண்ணுக்குக் காட்டும் உளம் போல, அக்கடவுளே உயிர்களுக்கெல்லாம் காணும் உதவியும், காட்டும்உதவியும் செய்து போதருகின்ருர். இத்தகைய அரிய பெரிய இனிய கருத்துக்கள் பலவற்றைத் தருக்க நெறி முறைகள் பிறழாது விளக்கிக் காட்டி, இறைவனுண்மையினை நிறுவுகின்ருர் ஆசிரியர் மெய் கண்டார்.

இறைவனுலேயே உலகம் முத்தொழிற் பட்டு இயங்கி வருகின்றது என்றும்; அதனுல் இறைவனே உலகிற்கு முதல்வன் என்றும்; உலகிற் பிறந்தும் இறந்தும் உழன்று வருகின்ற உயிர்களெல்லாம், கட்டுநிலை (பெத்தம்), வீடுபேற்று நிலை (முத்தி) என்னும் இருவகை நிலைகளிலும் இறைவனுகிய முதல்வனைத் தொழுது வழிபட்டு, அவனுக்குப் பணிபுரிந்து ஒழுகியுய்தற்குரிய கடப்பாடுடையனவேயாகும் என்றும்; மெய்கண்டார் பெருமான், சிவஞான போதம் என்னும் தமது செந்தமிழ் ஞானத் தத்துவ நூலில், திறம்பட விளக்கியருளியிருக்கக் காண்கின்றேம்.

**அருள்நந்திசிவம் :**

(7) இவ்வாறே ஆசிரியர் அருள்நந்தி சிவாசாரிய சுவாமிகள், தாம் இயற்றியருளிய சிவஞான சித்தியார் என்னும் சிறந்த சித்தாந்த சைவப் பெருநூலில், உலக இயக்கத்துக்குக் காரணமான கடவுள் ஒருவர் உண்டு என்பதனை,

---

(2) "There is a Divinity that shapes our ends, Rough - hew them how we will..."

Shakespeare, Hamlet.

''ஒருவனே டொருத்தி ஒன்றென்
றுரைத்திடும் உலகம் எல்லாம்,
வருமுறை வந்து நின்று
போவதும் ஆதலாலே,
தருபவன் ஒருவன் வேண்டும்;
தான்முதல் ஈறும் ஆகி
மருவிடும் அனுதி முத்த
சித்துரு மன்னி நின்றே''

என்று முடிந்த முடிபாகவும், அழகுறவும் தெளிவாகவும் விளக்கி மொழிந்தருள்கின்றார்.

அம்மட்டோ! நம்முடைய உயிர்களெல்லாம் நனவு கனவு உறக்கம் பேருறக்கம் உயிர்ப்படக்கம் (சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம்) என்னும் ஐந்து வகை அவத்தை நிலைகளை அடையும் இயல்பின; அத்தன்மையானது, அரசன் ஒருவன் தன் படைகளும் பரிசனங்களும் புடைசூழ வெளியே போந்து பவனி செல்லுதலும், பின்னர்த் தனது அரண்மனைக்குத் திரும்பி அந்தப்புரம் புகுதலும் போன்றதாகும்; அவ்வவத்தை யனுபவங்கள் முறையே புருவநடு கழுத்து இருதயம் கொப்பூழ் மூலம் என்னும் இடங்களில் நிகழும்; அவ்வவத்தைகளில் 35-25-3-2-1 என்னும் தத்துவக் கருவிகள் இயங்கி நிற்கும் என்பன போன்ற எத்தனையோ பல யோகஞான அனுபவச் செய்திகளைக் கூறுகின்றார். இவ்வாற்றுலெல்லாம்.

"பூதம் ஆனவை காரியங்கள்;
பொலிந்து மன்னி அழிந்திடும்;
ஆதலால் ஒரு நாதன் இங்குளன்
என்று அறிந்துகொள் ஐயனே''

என்று அருள்நந்தி சிவாசாரிய சுவாமிகள், இறைவன் ஒருவன் உளன் என்பதனையும், அவனை நாம் வழிபட்டு உய்ய முயலவேண்டுவது நமக்கு மிகமிக இன்றியமையாத தலையாய பெருங்கடமை என்பதனையும், பசுமரத்தாணி அறைந்தாற்போல நம்மனோர் உள்ளத்திற் பதியும்படி விளக்கியிருக்கின்றார்.

**தாயுமானவர் :**

(8) நாம் இறந்து போனால், நம்முடைய பிணமாகிய உடலை நான்குபேர் சுமக்க வேண்டியிருக்கின்றது. ஆனால் அவ்வளவு பெரிய சுமை மிக்க உடலைச் சுமை தெரியாமல், நாம் எங்ஙனமோ இப்போது மிகவும் எளிதாகச் சுமந்து கொண்டு இருந்து வருகின்றோம். இஃது எத்தனை வியப்பு! இது தெய்வத்தின் செயலே யன்றோ?

''தோற்பாரம் நால்ஆள்
சுமை ஆகும்; சீவன் ஒன்று இங்கு
ஆர்ப்பால் எடுத்தது
எவராலே? பராபரமே''

என வியந்து வினவித் தாயுமானவர், நம்மைச் சிந்திக்க வைத்துத் தெய்வமொன்றுண்டு என்னும் மெய்யுணர்வை நமக்கு நல்குகின்றார்.

(9) இது மட்டுமோ? நாம் நமது தாயின் கருப்பப் பையின் கண்ணே குழந்தையாக, முந்நூறு நாட்கள் (பத்து மாதங்கள்) அடைந்து கிடந்து வளர்ந்து வருகின்றோமே! அப்போது நமக்கு அங்கு உண்ண உணவும், பருகத் தண்ணீரும், மூச்சு விடுவதற்குக் காற்றும் கொடுத்து உதவிக் காப்பாற்றுபவர்கள் யார்? கடவுளே யல்லரோ? அத்தகைய அருட்பெருங் கடவுளை, நாம் நினைத்துணர்ந்து நன்றி பாராட்டுதற்குக் கடமைப்பட்டிருக்கின்றோம் அன்றோ? என்கின்றார் தாயுமானவர்.

'' தாயர்கர்ப் பத்தூடு அனமும்
தண்ணீரும் தந்தருளும்
நேய! உனை யாரே
நினையார்? பராபரமே''

**இராமலிங்க அடிகள் :**

(10) காற்று, என்றும் எங்கும் ஒரு நிலையில் நில்லாத இயல்புடையது. ஓர் இடத்திலும் நிலைத்து ஒரு கணமேனும் நில்லாமைதான், காற்றின் சிறப்பியற் பண்பு. இத்தகைய காற்றுப் போன்ற உயிரை எத்துணையோ பல

எண்ணிறந்த துளைகளையுடைய ஒட்டைக்குடம் போன்ற நம்மனோர் உடலின் கண் புகுத்தி, அவ் வுயிர் ஆகிய காற்று ஓடி விடாமல், ஒரு குறிப் பிட்ட கால அளவு அதன்கண் ஒடுங்கிக் கிடந்து உலவிவரும் வண்ணம், ஒரு பெருஞ் செயற் கருஞ் செயலைச் செய்து வைத்துள்ள மாபெருஞ் சித்தன் யாவன்? கடவுள் என்றல் லாமல் வேறு எவ்வகையில் நாம் அச்சித்தனைக் குறிப்பிடுவது?

''நில்லாத காற்றை
நிலையாக் கடத்தடைத்துச்
செல்லாது வைத்தருளும்
சிறந்தபெருஞ் சித்தன் எவன்?

எனவினவி, இராமலிங்க அடிகளார் தாமும், நமக்கு இறைவன் ஒருவன் உண்மையினைத் தேற்றி இனிது நிறுவியருள்கின்றார்.

**மனநோய் மருத்துவர் :**

*(11)* தெய்வ நம்பிக்கையும், தெய்வ சிந் தனையும், தெய்வ வழிபாட்டுத் தியானமும், மக்களாகிய நம்மனோரின் வாழ்க்கைக்கு மிக்க பயன் அளிப்பனவாகும். இவ்வுண்மையினை உலகப் பேரறிஞர்கள் பலர், இந்நாளிற் பெரிதும் உணரத் தலைப்பட்டு வருகின்றனர். உலகப் புகழ் பெற்ற மனஇயல்நூற் பேராசிரியரும், மனநோய் மருத்துவரும் ஆகிய கார்ல் கஸ்டாவ் யங் (Carl Gustav Jung) என்பவர் குறிப்பிடும் பின் வரும் செய்தி, இங்கு நாம் பெரிதும் கருதி யுணர்தற்கு உரியது.

''கடந்த முப்பது ஆண்டுகளாக உலக நாடுகள் அனைத்திலும் உள்ள மக்கள் பலரும் என்பாற் கலந்து ஆய்வுரை கேட்டுள்ளனர். எத்துணையோ நூற்றுக்கணக்கான பிணியாளர் களுக்கு, யான் மருத்துவம் புரிந்துள்ளேன். அவர்களுள் மிகப் பெரும்பாலோர் 'புரொட் டஸ்டண்டுகள்'. ஒரு சிறு பான்மையினர் யூதர் கள். கடவுளை நம்புகின்ற கத்தோலிக்கர் களோ, ஐந்து அல்லது ஆறு பேர்களுக்கு, மேற் படாதவர்களே ஆவர்.

என்னுடைய பிணியாளர்கள் அனைவருள் ளும், வாழ்க்கையின் இரண்டாம் பகுதியில், அதாவது முப்பத்தைந்து வயதுக்கு மேல், தமது இன்னல்கள் தீருவதற்கு உரிய இறுதிவழியாகத் தமது வாழ்க்கையிற் சமயவுணர்வு கைவரப் பெறுதலைக் கொள்ளாதவர்கள் ஒருவராவது இல்லை.

அவர்களில் ஒவ்வொருவரும் நோயுற்ற தற்குக் காரணம், உயிர்ப்புடைய ஒவ்வொரு சமயமும், அவ்வக் காலத்தில் தன்னைப் பின்பற்றி ஒழுகுகின்ற மக்கள் அனைவருக்கும் தருகின்ற மன நிறைவு ஆகிய வாழ்வியல் நல்லுணர்ச்சி யினை, அவர்கள் பெற இயலாமல், இழந்து விட்டமையே யாகும். மீண்டும் சமயவுணர்வு கைவரப் பெறாமல், அவர்களில் ஒருவராவது உண்மையில் தம்முடைய பிணிதீரப் பெற் றிலர்.'' *(3)*

---

(3) During the past thirty years, people from all the civilized countries of the world have consulted me. I have treated many hundreds of patients, the large number being Protestants, a smaller number of Jews and not more than five or six believing Catholics.

Among all my patients in the second half of life, that is to say, over thirtyfive years, has not been one, whose problem in the last resort was not that of finding a religious outlook on life.

It is safe to say that every one of them fell ill, because he had lost that which the living religions of every age, have given to their followers, and none of them has been really healed who did not regain his religious outlook".

—Prof. Carl Gustav Jung
Modern Man in Search of a Soul, P. 264.

முடிவுரை :

இதுகாறும் கூறிவந்த சிலவற்ருல் தெய்வ சிந்தனையும் தியானமும், மக்களின் வாழ்க்கைக்கு எத்துணையளவுக்கு இன்றியமையாதவை என்பது, வெள்ளிடை விலங்கலாய்த் தெள்ளிதிற்புலனுகும். ஆதலின் நாம் அனைவரும் தெய்வ வழிபாட்டு நெறிகளிற் சிறப்புற ஈடுபட்டு, வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து, உய்ய முயலுவோமாக!

— ஆசிரியர்

ஒன்றென் றிரு; தெய்வம் உண்டென் றிரு;
உயர் செல்வம்எல்லாம்
அன்றென் றிரு; பசித் தோர்முகம் பார்;
நல் அறமும், நட்பும்
நன்றென் றிரு; நடு நீங்கா மலே
நமக்கு இட்டபடி
என்றென் றிரு; மனமே! உனக்கே
உபதேசம் இதே!

—பட்டினத்தார்.

---

# செய்திச் சுருக்கம்

**சமயநீதி போதனை வகுப்பு:** காஞ்சி ஸ்ரீ காம கோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் அவர்களின் அருள் ஆதரவில், 12-5-71 முதல் 21-5-71 வரையில், காஞ்சிபுரம் கொல்லாகன்னையச் செட்டியார் தோட்டத்தில், காலை மாலை இரு வேளைகளிலும், சிறப்புற நடைபெற்றது. காஞ்சி தொண்டைமண்டல ஆதீன குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் வகுப்பைத் தொடங்கி வைத்தும், மெய்யுணர்வு — சிவசாதனம் — சைவத் திருமுறைகள் என்னும் பொருள்கள் பற்றி அருளுரைகள் ஆற்றியும், நிறைவு விழாவில் மாணவர்களுக்குத் தகுதிச் சான்றிதழ்கள் வழங்கியும் சிறப்பித்தருளினர்கள். திருக்கோயில் ஆசிரியர் திரு. ந. ரா. முருகவேள், M.A., M.O.L., திருவாவடுதுறை ஆதீன வித்வான் திரு. க. வச்சிரவேலு முதலியார், B.A.L.T., 'இதபாஷிணி' ஆசிரியர் தஞ்சை திரு. முத்துகிருஷ்ண சாஸ்திரிகள், உபந்நியாசசேகரி பழுவூர் திரு. எஸ். வி. சுப்பிரமணிய சாஸ்திரிகள், டாக்டர் திரு. டி. எம். பி. மகாதேவன், M.A.Ph.D., தொண்டைமண்டலாதீனப் பாவலர் திரு. நா. ப. தணிகையரசு, புலவர் திரு. வே. சிவசுப்பிரமணியம், புலவர் திரு. மா. வேங்கடேசன், திரு. அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார், புலவர் திரு. மு. கணபதி, திரு. கோ. பாலசுந்தர நாயகர், M.A., திரு. கி. வா. ஜகந்நாதன், M.A., புலவர் மாமணி திரு. வீ. திருஞானசம்பந்த முதலியார், பேராசிரியர் ஆழ். இராதாகிருஷ்ணன் M.A., புலவர் திரு. எஸ். கே. இராமராசன், சைவப் பிரசங்கமணி திரு. வே. மு. பிரமீச முதலியார், இஷ்டசித்தி திரு. ஏகாம்பர குருக்கள், திரு. தெ. ஞானசுந்தரம், M.A., திரு. எஸ். சத்தியசீலன், M.A., ஆகிய அறிஞர் பெருமக்கள் பலர், அரிய இனிய ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் ஆற்றி மகிழ்வித்தனர். ஸ்ரீமடத்தின் சார்பில் திரு. சிவராமய்யர், ஸ்ரீகாரியம் ஜெயராமய்யா, ஆகிய இருவரும், இவ்வகுப்பு நன்கினிது நடைபெறுவதற்கு, உடனிருந்து எல்லா வகையான உதவிகளையும் செய்து, பெரும் துணை புரிந்தனர். ஆசிரியப் பணிபுரியும் நூற்றுக்கு மேற்பட்ட மாணவர்கள், பல மாவட்டங்களிலிருந்து வந்து வகுப்பிற் கலந்துகொண்டு பயன்பெற்றனர். ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகள் அவர்களின் அருளாணைப்படி, புலவர் திரு. பு. மா. ஜெயசெந்தில்நாதன், B.A., அவர்கள் அமைப்பாளராக இருந்து, இவ்வகுப்பு செவ்விதின் நடைபெற மிகவும் சிறந்த முறையில் பணியாற்றினர்கள். காலை மாலை இரு வேளைகளிலும், வகுப்புக்கு வந்திருந்த மாணவர்கள், காஞ்சியிலுள்ள பல கோயில்களுக்கும் சென்று முறையாக வழிபட்டு மகிழ்ந்தமை சிறப்பாகக் குறிப்பிடற்பாலது.

—ஆசிரியர்,

# வீர சைவம்

## முன்னுரை :

'வீர சைவம்' என்னும் சொல், பேச்சு வழக்கில் மக்கள் பலராலும், பலகாலும் பயன் படுத்தப்படுகின்றது. ஆனால் மக்கள் அதன் உண்மைச் சொற்பொருளையுணர்ந்து கொள்ளா மல், விபரீதமான முறையில், மிகவும் பிழை யான திரிபுபட்ட பொருட்குறிப்பிலேயே, வழங்கிவருதலைக் காண்கின்றோம். 'வீர சைவம்' என்னும் சொற்றொடரில், 'வீரம்' என்பதனை மக்கள் பலரும், முரட்டுத்தனம்—பிடிவாதம்—மூர்க்கத்தனம் என்பன போன்ற பொருட் களின் குறிப்பிலேயே, பெரிதும் தவறாகக் கருதி வழங்கி வருகின்றனர். 'வீர சைவம்' என் றால், அஃது ஏதோ பிற சமயங்களை வெறுக்கும் குறுகிய நோக்குடைய பிடிவாதச் சைவம் போலும் என்றே, மக்கள் பலரும் பொதுவாகப் பிழைபடக் கருதுவதாகத் தெரிகின்றது.

## வீர சைவ இயக்கம் :

'வீர சைவம்' என்பது கன்னட நாட்டில், கி. பி. 12ஆம் நூற்றாண்டில் தோன்றிய ஒரு வகை மறுமலர்ச்சி இயக்கச் சமயம் ஆகும். சிவ வழிபாட்டிலும் நெறியிலும் மிகவும் ஈடுபாடு கொண்டு, உறுதியுடன் அசைவின்றி நிற்கும் சமயமே 'வீர சைவம்' என்னும் சிறப்புப் பெயர் பெறுவதாயிற்று.

தொன்மைமிக்க வீர சைவ நெறியினை, ஒரு பெரும் மறுமலர்ச்சி இயக்கமாகத் தோற்று வித்தருளியவர், ஸ்ரீ பசவர் (கி. பி. *1131-1167*) என்னும் கன்னட நாட்டுச்சான்றோர் ஆவர். அவர் பிராம்மண குலத்தில் தோன்றியருளி யவர். பம்பாய்க்கு அருகேயுள்ள கல்யாணி நக ரில் ஆண்டு வந்த விச்சலன் (கி. பி. *1157-67*) என்னும் அரசனின் தலைமை அமைச்சராக விளங்கியிருந்தவர். இவரைத் திருநந்திதேவர் அவ்தாரமாகப் பசவ புராணம் முதலிய வீர சைவ நூல்கள் கூறும்.

நமது தமிழ்நாட்டில், அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் சமய குர வர்கள் நால்வராலும், அவர்கள் வழியே தோன்றிய மெய்கண்டார், அருள்நந்தி சிவா சாரியர், மறைஞானசம்பந்தர், உமாபதிசிவா சாரியர் என்னும் சந்தான குரவர்கள் நால்வ ராலும் பரப்பி வளர்க்கப்பட்ட சிவவழிபாட்டுக் கொள்கையும் நெறியுமே, 'சைவம்' 'சைவ சித் தாந்தம்' என்னும் பெயர்களால் தொன்று தொட்டு வழங்கி நிலவி வருகின்றன.

ஆயினும் சிவ வழிபாட்டில் உறுதி, சிவனடி யார்க்குப் பணி புரிதலில் ஈடுபாடு முதலிய சில கொள்கை ஒப்புமைகள் காரணமாக, கன்னட நாட்டில் தோன்றிய வீர சைவம், தமிழ்நாட்டி லும் அங்கங்கே தழுவிக்கொள்ளப்பட்டுப் பரவி நிலைபெற்றுள்ளது.

## வீர சைவச் சான்றோர்கள் :

வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியார், கொலைமறுத்தல் என்னும் நூல்களை இயற்றியருளிய கோவைப் பேரூர்ச்

சாந்தலிங்க சுவாமிகள், துறைமங்கலம் சிவப் பிரகாச சுவாமிகள், விருத்தாசலம் குமார தேவர், திருவண்ணமலைக் குகைநமச்சிவாயர், குருநமச்சிவாயர், திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள், மயிலம் சிவஞானபாலைய சுவாமி கள், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமி கள், முதலிய சான்றோர் பெருமக்கள் பலரும், வீர சைவ நெறியினைப் போற்றி ஒழுகியவர் களே ஆவர்! துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றியருளிய பிரபுலிங்க லீலை, சித்தாந்த சிகாமணி முதலியன தமிழிலுள்ள சிறந்த வீர சைவ நூல்கள் ஆகும்.

## இலிங்கதாரணம் :

வீர சைவர்கள், தம் குருவினல் முறைப்படி அளிக்கப்பெற்ற இலிங்கத்தினைத் தலை கழுத்து தோள் மார்பு என்னும் இடங்கள் ஒன்றில், எப் போதும் பிரிவற அணிந்து கொண்டிருப்பர். இலிங்கதாரணம் வீர சைவர்களுக்கு இன்றி யமையாத ஒரு பெருஞ்சிறப்பு அடையாளம் ஆகும். வேதம், ஆகமம், உபநிடதம், புராணம் முதலிய பலவற்ருலும் வற்புறுத்தப்படுவது இலிங்கதாரணம் என்பது, வீர சைவக் கொள்கை.

சதுமறை யுள்ளும், மிக்க
சாத்திரங் களிலும், ஈரொன்
பதுவித புராணத் துள்ளும்,
பகர்தரு காமி கம்தான்
முதல்வரும் ஆக மத்தும்
மொழிந்திடப் பட்டிடும், சந்
ததமும் மெய்விடா இலிங்க
தாரணம் விறற்சை வர்க்கே

—சித்தாந்த சிகாமணி.

எனவரும் செய்யுளால், இலிங்கதாரணம் செய்துகொள்ளுதல் வீர சைவத்திற்கு மிகவும் இன்றியமையாத சிறப்பியற் கொள்கை என் பதை உணரலாம். அதுபற்றியே வீர சைவர் களுக்கு 'இலிங்காயதர்' என்றும் ஒரு சிறப்புப் பெயர் வழங்கும்.

## இஷ்டலிங்கம் :

வீர சைவர்கள் தம் உடலிற் பிரிவற எப் பொழுதும் அணிந்துகொண்டு, பூசை புரிந்துவழி பட்டுவரும் இலிங்கத்தை 'இஷ்டலிங்கம்' எனப் போற்றி வழங்குவர். அதற்குச் செய்யும் பூசை தரிசனம் மூர்த்தம் பிரசாதம் நிஷ்டை தியானம் ஆகியவற்றை மிக அவர்கள் பெரிதும் முதன்மை யும் சிறப்புமாகக் கொள்வார்கள். தத்தமக் குரிய இஷ்டலிங்கத்தைத் தவிர, வேறு பரார்த் தம் என உள்ள பிறலிங்கங்கள் மாட்டும் அவர் கள் அத்துணை அன்பு செலுத்த மாட்டார்கள். கற்புடைய நங்கை ஒருத்தி, தனக்கென விரும்பி வரித்துக்கொண்ட கணவனைத் தவிர, வேறு பிறர் எவரையும் மனத்தினுற் கருதமாட்டா ளாதல்போல, தனக்குரிய இஷ்டலிங்கம் தவிர வேறு பிறிது எதிலும் அன்பு செலுத்தாத உறுதிப்பாடு உடைமையே 'வீர சைவம்' எனப்படும்.

கணவன்பால் இன்பமுறும்
கற்புடையாள் வேருேர்
திணவன்பால் இன்பமுறச்
சிந்தித்து அணைவுருள்;
ஆங்கதுபோல் இஷ்டலிங்கத்
தாகும்அன்பு வேற்றுலிங்கத்
தோங்கவிடா தாங்கதும் வீரம்.

—அத்துவித வெண்பா.

வீர சைவர்கள், தீக்கை செய்துகொண்டு தம்மைப்போல் இஷ்டலிங்கபூசை செய்துவரும் இயல்பினர் அல்லாத ஏனையோர் பிறர், எத் தகைய சிறப்பும் அன்பும் உடையவர்களே யாயினும், அவர்களோடு ஒன்றுக இருந்து உண்ணுதல் முதலிய எந்தச் செயலையும்செய்ய ஒருப்படாத திடமான கொள்கையுடையவர் கள் ஆவர்! இத்தகைய உறுதிப்பாட்டினுலும் அவர்களின் நெறிக்கு 'வீர சைவம்' எனப் பெயர் அமைவதாயிற்று,

இவ்விரதம் இல்லாதார்
எவ்விரதர் ஆயிடினும்
அவ்வவரோ டொன்ருய் அருந்தல்
முதல் எவ்வெவையும்
உள்ளத்தா லும்நினையா
துற்றஇடம் சற்றகலாக்
கொள்கைத்தாம் கோலமும் வீரம்
—அத்துவித வெண்பா.

**சித்தாந்த சிகாமணி :**

இங்ஙனம் தமது உடலில் இலிங்கதாரணம் செய்துகொண்டு, தமது ஞானுசிரியர் உபதேசித்தருளிய முறைப்படியே இஷ்டலிங்க பூசை புரிதலில், மிகுந்த திடமும் உறுதியும் பூண்டு ஒழுகும் வீரம் உடைய சைவரே, வீர சைவர் எனப்படுவர். இதனைப் பின்வரும் சித்தாந்த சிகாமணிச் செய்யுள் தெளிவுற விளக்குதல் காணலாம்.

அத்தனை அகம் தரிக்க
அசத்தன் ஆயினும், அதாஅன்று
சத்தனே எனினும், ஞான
தற்பர லிங்க மேஎன்
புத்தியின் திட்பம் எய்திப்
புறத்து இலிங்கம் தரிக்கா
வித்தக நெறியு ணர்ந்தோர்,
வீர சைவர்கள் தாம் அன்றே.

தம் பொருளாம் இலிங்கம் தன்னைச்
சற்றிதழ் அவிழ்ந்த தூய
வம்பலர் கந்தம் ஆதி
மருவுற முறையிற் கொண்டு
கம்பமில் மனத்தி னேடு
கரபீடத் தினில்அர்ச் சிப்பர்
இம்பரின் என்றும் சுத்தர்
எனப்படும் வீர சைவர்.

'வீரசைவன்' என்னும் சொல்லுக்குத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தாம் இயற்றிய 'சித்தாந்த சிகாமணி' என்னும் நூலில் பின்வருமாறு பொருள் விளக்குகின்ருர்கள்.

*(1)* அருமை மிகுந்த வேதாந்தச் செந்நெறியினுல் விளைகின்ற ஞானமே வித்தை எனப் பெயர்பெறும். அவ்வித்தையில் அன்பு கொண்டு ஈடுபட்டு விரவி நிற்பவன் வீரன் என்னும் சிறப்பைப் பெறுவான்.

அரியவே தாந்தத்தின் ஆகும் ஞானமே
மருவரும் வித்தை என் றுரைப்பர்; மற்றதில்
வீரவினேன் யாவன்? மற்றனையன் வீரன்
என்று
உரைதருகிற்பர்மெய்யுணர்ந்துளோர்களே

*(2)* வீ என்பது வித்தையைக் குறிக்கும். ர என்பது ரமித்தல் அல்லது மகிழ்தலை யுணர்த்தும். சைவம் என்பது சிவனை வழிபடும் நெறி. சிவனை வழிபடும் நெறியாகிய ஞான வித்தையில் ஆர்வம் கொண்டவனுக்கு வீரசைவன் என்று பெயர்.

''சித்தம் ஆகும் சிவமயம் ஆகிய
வித்தை யூடு விசேடம தாகியே
எத்தினுல் இங்கு இரமிப்பன்; அன்னவன்
பொய்த்திடாத புகழ் வீர சைவனே.'

*(3)* சிவனும் சீவனும் ஆகிய இருவரும் ஒன்று படுதல் ஆகிய சிவசீவ ஐக்கியம் என்னும் வித்தையில் பிறப்பு இறப்புக்கள் கெடுமாறு, ஒன்றி மகிழ்ந்து ரமிப்பவன் எவனே அவன் வீரசைவன் ஆவான்.

தீது அகன்ற சிவசீவ ஐக்யமாம்
வீத ரும்பெரு வித்தையின் நன்குறச்
சாதம் இன்றி ரமிக்கும் அச் சைவன்மற்று
ஓதில் அன்னேன் உயர் வீரசைவனே.

**சமயநெறி வீரம் :**

இனி இப்பொருள்களிலெல்லாம் வேருக, மிகவும் புகழ்வாய்ந்த தத்துவ நூற் பேராசிரியர் ஆகிய 'சுரேந்திரநாத் தாஸ்குப்தா' என்ப

வர், ஒரு பொருள் கூறுகின்றார். அயலார் அல்லது பகைவர்களிடம் இருந்து தம்முடைய சமயத்தினைப் பாதுகாத்துக் கொள்ளுதலில் வீரத்திறன்மிக்கு விளங்கியவர்கள் ஆதலின், வீரசைவர்கள் என்று அழைக்கப்பட்டனர் எனக்கொள்ளுதல் பொருத்தம் எனக் குறிப்பிடு கின்றார் அவர்.

நாட்டின் நலத்திற்காகவும், பாதுகாப்பிற் காகவும், அருஞ்செயல்கள் பல ஆற்றலும், உயிர் கொடுத்து உதவுதலும், ஒப்புயர்வற்ற பெருமையுடையனவாக, உலகெங்கணும் மதிக்கப் பெறுகின்றன. அங்ஙனமே தங்கள் சமயநெறிக்குப் பிறராற் கேடு நேராமற் பேணிப் பாதுகாத்துக்கொள்ள முயலுதலும் சிறப்புக்குரியதேயாகும். நாட்டுப்பற்று மிக்கு விளங்கி, அதன்கண் உறைப்பும் விழிப்பும் பெற்றொளிர்தல் இன்றியமையாத கடமை யாதல்போலவே, தத்தம் சமய உரிமைகளையும் பண்பாடுகளையும் நெறிமுறை சிறிதும் பிறழா மற் போற்றிப் பாதுகாத்துக்கொள்ளும் கருத் தும், கடமை யுணர்வும் பெற்று வாழ்தலும், பெருமைக் குரியதாகும் என்பதில்ஐயமில்லை.

கி. பி. 11, 12 - ஆம் நூற்றாண்டுகளில், தம்முடைய கன்னட நாட்டில், சைவ சமயம் நலிவுற்றழிந் தொழியாமற் பொலிவுறச் செய் யும் பொருட்டு, அதன்கண் ஆழ்ந்த பற்றும் அளப்பரிய ஈடுபாடும் வாய்ந்து சிவலிங்கதா ரணம் செய்து கொண்டு சிவவழிபாட்டில் உறைத்து நின்றவர்களே, வீரசைவ நெறியினர் என்பது சாலவும் பொருந்துவதேயாகும். தத்துவப் பேரறிஞர் 'தாஸ்குப்தா' அவர்களின் கருத்தை வலியுறுத்தும் முறையில், பின்வரும் சித்தாந்த சிகாமணிச் செய்யுள் அமைந்திருத் தலும், அறிந்து இன்புறுதற்குரியது.

யாண்டொரு தாவரத்திற்கு
இடையூறு வரினும், பத்தர்க்கு
ஏண்தரு சிவவே டத்தோர்க்கு
இடர்கள்வந் துறினும், நில்லாது
ஆண்டு உயிர் விடுத்தே யேனும்
அளிக்க ; மெய்ப் பரன் பொருட்டு
மாண்டவன் சிவனே டொன்றும்
பதத்தினை மருவும் அன்றே !

## முடிவுரை:

இதுகாறும் விளக்கியவற்றால், 'வீரசைவம்' என்பது ஏதோ பிற சமயங்களை வெறுக்கும் குறுகிய நோக்குடைய பிடிவாதச் சைவம் போலும் எனச் சாதாரண மக்கள் சிலர் கருது வது தவறு என்பதும், கன்னட நாட்டில் தோன்றியருளிய பசவர் முதலிய சான்றோர் களால் வளர்க்கப்பெற்ற ஒரு சிறந்த பண் பாட்டு நெறியே வீரசைவம் என்பதும், தமிழ்ப் பெருஞ் சான்றோர்கள் பலர் அதனைத் தழுவிப் போற்றி வளர்த்து மகிழ்ந்துள்ளனர் என்பதும் பிறவும் தெளியப்படும்.

—ஆசிரியர்.

---

(1) "The Siddanta - Sikhamani gives a fanciful interpretation of the word, 'Vira' as being Composed of 'Vi' meaning knowledge of identity with Brahman, and 'ra' as meaning someone who takes pleasure in such knowledge. But such an etymology accepting it to be correct would give the form 'Vira' and not 'Veera'. No explanation is given as to how 'Vi' standing for 'Vidya' would lengthen its vowel in to 'Vee' ..

I therefore venture to suggest that Veera-saivas were called Veeras or Heroes for their heroic attitude in an aggressive or defensive manner in support of their faith.

-Surendranath Dasgupta, A History of Indian philosophy, Vol III., P. 44-45.



# ஸ்ரீ பகவத்பாதரின் பெருமை

காஞ்சி காமகோடிபீடம்
(ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரசுவதி சுவாமிகள் அவர்கள்)

## பஜகோவிந்தம் :

ஆசாரியர்களின் உயரிய நூல்களில் ஒன்று பஜகோவிந்தம். பக்தி இல்லையென்றால் அறிவினால் பயன் இல்லை என்றும், எனவே கல்வியின் லட்சியம் ஈசுவர பக்தியை வளர்ப்பதுவே என்றும் ஆசாரியர் கூறியிருக்கிறார். மற்ற எதற்கும் நேரமில்லாத மக்கள், சதா சர்வ காலமும் உலகில் கஷ்டங்களினால் அவதிப்படுகின்றனர். இந்தக் கஷ்டங்கள் சொப்பன நிலையிலும் சென்று துன்புறுத்துகின்றன. ஒருவனது உத்தியோகம் அல்லது கல்விநிலை எதுவாக இருந்தாலும், ஒவ்வொருவரும் கடவுள் தியானத்துக்குச் சிறிது நேரம் ஒதுக்கி வைக்க வேண்டும். இதனால் மன அழுக்கு நீங்க வழி பிறக்கும் ஒவ்வொரு நாளும் சேரும் உடல் அழுக்குகளை அன்றாடம் நீராட்டத்தினால் போக்குவதுபோல, 'பஜகோவிந்தம்' என்ற நீராட்டத்தினால் மன அழுக்குகளைப் போக்கிப் புனிதமாக்க வேண்டும்.

## பிரச்னோத்தர ரத்னமாலிகை :

ஆதி பகவத்பாதர்கள் பிரச்னோத்தர ரத்ன மாலிகை என்று ஒரு கிரந்தம் செய்திருக்கிறார்கள். அந்நூல் முழுவதும் கேள்வியும் பதிலுமாகவே இருக்கும். அதில் ஒரு கேள்வி இருக்கிறது. அதாவது, 'கிம் ஸம்ஸாரே ஸாரம்?' என்பது. ஸம்ஸாரத்தில் எது ஸாரமானது? என்பது வினா. அதற்குப் பதிலும் இருக்கிறது. ஆனால் எனக்குச் சட்டென்று அர்த்தம் புரியவில்லை. "பகுஸோபி விசிந்த்ய மாநம் இதமேவ" என்று பதில். பகுஸோபி என்றால் அநேக தடவை என்று அர்த்தம். இதையே நினைப்பதென்றால் இந்தக் கேள்வியையே திருப்பித் திருப்பி நினைப்பதென்றே அர்த்தம். 'சம்சாரத்தில் சாரம் எது?' என்பதைத் திருப்பித் திருப்பி நினைக்கிறது இருக்கிறதே, அது தான் சாரம். அதாவது உலக வாழ்க்கையில் சாரமொன்றுமில்லை என்பதுதான் அதற்குப் பதில். இப்படி முப்பது வருஷமாக அர்த்தம் சொல்லிக்கொண்டிருந்தேன். இப்போது வேறு விதமாகத் தோன்றுகிறது. நிறைய சாரம் இருப்பதாகவே தோன்றுகிறது.

அப்படியில்லையென்றால் நாம் ஏன் மநுஷ்யர்களாய்ப் பிறக்கவேண்டும்? ஏதோ ஒரு வாசனையால் பிறப்பு வந்து சேருகிறது. அதிலே பல கஷ்டங்கள் பாபங்கள் ஏற்படுகின்றன. கடைசியில் ஒரு நல்லது ஏற்படுகிறது. ஒரு மரமோ செடியோ, அதுவும் உயிர் உள்ள வஸ்துதான். அதுவும் வளருகிறது. ஜலம் விட்டால் சந்தோஷப்படுகிறது. ஜலம் விடாவிட்டால் அழுகிறது. அதிலே பறவைகள் வந்து தங்குகின்றன. அவை சந்தோஷமாக இருக்கின்றன. ஆகையினால் சம்சாரத்திலே சாரமில்லை என்று சொல்லமுடியாது. நிறைய இருக்கிறது. அதைக்கண்டுபிடிக்க உழைக்க வேண்டும். அதிலே எத்தனையோ கஷ்டங்கள் வரும்.

பத்தாயிரம் பேர் கஷ்டப்பட்டு உழைத்தால், அதிலே ஒருத்தனுக்குப் பிரயோஜனம் ஏற்படும். அவன் அடைந்த பிரயோசனம்,

இவ்வளவுபேர் பட்ட கஷ்டத்துக்கு ஈடாக இருக்கும். ஒவ்வொருவருக்கும் ஒருசமயம் வரும். காரணமில்லாத ஒரு காரியமும் கிடையாது என்பது ஒரு பழமொழி. காரியமோ அனந்தமாக இருக்கிறது. ஏதாவது ஒரு காலத்திலே ஒவ்வொருவருக்கும் ஒரு சமயம் வரும். பிரயத்தனம் பண்ணினல் வீணுகப் போகாது. 'நாம் பிறந்ததற்கு என்ன பிரயோஜனம்? எதற்காகப் பிறந்தோம்?' என்று நினைக்க வேண்டும். அந்தப் பிரயோஜனத்தை அடைவோமே என்று நினைக்கவேண்டும். ஏதோ ஒரு மரத்தில் காய்க்கும் காய்களில் சில வெதும்பிப் போகின்றன. சில காய்ந்து போகின்றன. சிலவே பழுக்கின்றன. அப்படி எல்லாம் பழுத்தாலும் உலகத்தில் கஷ்டந்தான். ஒரே மரமாகத்தான் இருக்கும். அதனுல் ஏதோ ஐம்பதாயிரத்தில் ஒன்றுதான் நல்லதை அடைய முடியும். அந்த நல்லதை அடைவதற்கு இவ்வளவையும் அர்ப்பணம் பண்ண வேண்டும் 'நமக்கு ஏன் பாபம் வருகிறது? கோபம் வருகிறது? காமம் வருகிறது? இவையெல்லாம் ஏன் வரவேண்டும்? எப்போதும் ஆனந்தமாக, சந்தோஷமாக இருக்கக்கூடாதா?' என்று தோன்றுகிறது. இதற்குப் பதில் ஒன்றும் நமக்குப் புரியவில்லை. எல்லாம் நல்லதற்குத்தான். ஒரு மரத்திலே புஷ்பித்ததிலிருந்து தான், காயும் பழமும் உண்டாகின்றன. புஷ்பமாக இருக்கும்போது நாக்குக்கும் உபயோகப்படுகின்றது. பழம்நல்ல மதுரமாக இருக்கிறது. இந்த மதுரம் வருவதற்கு முன்பு எப்படி இருந்தது? பூவில் கசப்பாகவும், பிஞ்சில் துவர்ப்பாகவும், காயில் புளிப்பாகவும், பிறகு மதுரமாகவும் இருக்கிறது. மதுரம் என்பது தான் சாந்தம். சாந்தம் வந்தால் எல்லாப் பற்றும் போய்விடுகிறது. உடனே கீழே விழுந்து விடுகிறது. அதுபோல் இருதயத்தில் எல்லா இடத்திலும் மதுரம் வந்துவிட்டால், தானுகவே எல்லாப் பற்றும் போய்விடும். புளிப்பு இருக்கும் வரை பற்று இருக்கும். அப்போது காயைப் பறித்தால் காம்பில் ஜலம் வரும். காயிலும் ஜலம் வரும். ஆனல் நிறைந்து மதுரமாக ஆகிவிட்டால் தானுகவே பற்றும் போய்விடும்; ஆனந்தமாக இருக்கும். ஒவ்வொருவனும் இப்படியே ஆனந்தமாக இருப்பான்.

பழமாக ஆவதற்கு எப்படிப் புளிப்பும் துவர்ப்பும் வேண்டியிருக்கின்றனவோ, அது போலக் காமம் கோபம் துவேஷம் முதலியன ஒருவகையில் வேண்டியவைதாம். இவையெல்லாம் ஏன் வருகின்றன என்று அடிக்கடி நினைத்துப் பார்க்க வேண்டும். இதனுல் ஏதாவது பிரயோஜனம் உண்டா?

அவசியமாக வருகிறதா? அநாவசியமாக வருகிறதா? என்று நினைத்துப் பார்க்கவேண்டும். அப்படி நினைக்கவில்லையென்றுல், அது நம்மை ஏமாற்றிவிடும். ஏமாந்தும் விடுவோம். கோபம் வந்தால் நல்லதாக இருந்தால் கோபிக்க வேண்டும். காமம் வந்தாலும் நல்லதாக இருந்தால் வரவேண்டியதுதான். நல்லதற்காக எது வந்தாலும் வரவேண்டியதுதான். இல்லாவிட்டால் வெம்பிவிடும். புளிப்பு இருக்க வேண்டிய சமயத்தில் புளிக்க வேண்டும். துவர்ப்பு இருக்க வேண்டிய சமயத்தில் துவர்க்க வேண்டும். நாமாகப் போய் மோக்ஷத்தைத் தேட வேண்டாம். எந்தக் காலத்திலே எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இருந்தால், அது தானுக வந்துவிடும். அப்படி இல்லாமல் முயற்சி செய்தால் பிஞ்சிலே பழுத்தமாதிரிதான். நம் கடமைகளைச் செய்து வஜ்ரம் மாதிரி இருக்க வேண்டும்.

திருமழபாடி என்று ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. அங்கே பரமேச்வரனுக்கு வஜ்ரஸ்தம்பேச்வரர் என்று பெயர். தேவாரத்தில் "வயிரத்தூணே மாணிக்கமே," என்று பாடியிருக்கிறது. அதனுல் நாம் ஞானத்தைத் தேடிப் போக வேண்டாம். இந்த ஜன்மத்திலே வரவில்லையென்றுல், எத்தனை ஜென்மம் கழித்தாவது வரட்டும். அதனுல் நம் கடமைகளைச் செய்து கொண்டிருப்போம்; நிறையத் தர்மத்தை அநுஷ்டானம் பண்ணவேண்டும். காமமே இல்லையென்றுல் பிரபஞ்சம் எப்படி இருக்கும்? முதலில் பகவான் ஸனகாதிகளைச் சிருஷ்டி பண்ணினுர். அவர்களும் அப்படியே உட்கார்ந்திருந்தார்கள். அதனுல் பிரபஞ்சமும் சிருஷ்டியாகவில்லை; பிரபஞ்சம் சிருஷ்டியானுல் என்ன? சிருஷ்டியாகாவிட்டால் என்ன? என்று ஒரு சந்தேகம் வரும். பிரளயத்தில் எத்தனையோ ஜீவன்கள் காத்துக் கொண்டிருக்கின்றன.

அநாதியாக இருக்கின்றன. அவைகளுக்கு விடுதலை தரவேண்டும். அப்படி ஸனகாதிகள் உட்கார்ந்துகொண்டிருந்தால் பிரபஞ்சம் எப்படிச் சிருஷ்டியாகும்? அதனுல்தான் காமம் என்ற ஒன்றை ஏற்படுத்தினுர். கோபம், துவேஷம், அவமானம், பாபம் எல்லாம் அந்தக் காமம் என்ற ஒன்ருல்தான் ஏற்படுகின்றன. அப்படி இவ்வளவு கஷ்டம் இருந்தாலும் கடவுள் என்ற ஒன்று இல்லை என்ருல், நினைத்த மாத்திரத்தில் சாந்திதரும் மகான்களாக ஒரு சுகாசார்யரோ, ஒரு வியாஸாசார்யரோ, ஒரு வால்மீகியோ ஏற்பட்டிருக்க முடியாது. உற்பத்தி என்று இருந்தால் காமம் இருந்துதான் ஆகவேண்டும். முதல் சிருஷ்டியோடு இருந்தால் மற்ற ஜீவன்கள் கடைத்தேற முடியாது. ஏதோ ஒரு தப்புச் செய்ததால், அதனுல் ஒரு காயம் ஏற்பட்டால், மற்றவர்கள் அதைப் பார்த்துத் தப்புச் செய்யாமல் இருப்பார்கள்.

அவனுக்கு நல்ல குணங்கள் இருக்கின்றனவே, நமக்கு அவை வரவேண்டும் என்று அசூயைப்பட வேண்டும். ஒருவனை அசூயையால் கெடுக்கக் கூடாது. எல்லாம் நல்லதற்குத்தான். பிரயோஜனம் இல்லாத பொருள் ஒன்றும் கிடையாது. எல்லாம் பிரயோஜனம் உள்ளதுதான். நாக்குக்குள்ள ஷட்ரஸத்திலே மதுரந்தான் உயர்ந்தது. அதுபோல நவரஸங்களிலே சாந்தி தான் உயர்ந்தது. சாந்தியும் மதுரமும் ஒன்று. அதனுலேயே 'சாந்தி மதுரம், சாந்த மதுரம்' என்று சொல்லியிருக்கிறது. உலகத்தில் எவ்வளவோ கஷ்டங்கள் வருகின்றன. அல்ப ஆயுளிலே சாகின்றவனைப் பார்த்துச் சீக்கிரம் சாகிருனே என்று நினைக்கிருேம். தீர்க்காயுளாக இருப்பவன், 'இவ்வளவு பேரும் போய் நாம் இருக்கின்ருேமே! என்று நினைக்கிருன். எது வந்தாலும் வரட்டும் நம் கடமையைச் செய்துகொண்டிருக்கவேண்டும். செடிக்கு மதுரமும் சித்தத்துக்குச் சாந்தமுமே பழங்கள். நம் கடமையைச் செய்யாவிட்டால் நமக்குப் பதிதன் என்று பெயர். பதிதன் என்ருல் சறுக்கினவன் என்று அர்த்தம். சறுக்கு மரம் ஏறினுல் வழுக்கி வழுக்கித்தான்விடும். இப்படிப் பலபேர் வழுக்கி வழுக்கி விழுந்தால் ஒருவன் தான் ஜயிப்பான். சறுக்குகிறதே என்பதற்காக ஏருமல் இருக்கக்கூடாது. பதிதனுக நாம் இருந்தால்தான், பதிதபாவனன் (பகவான்) இருக்கிருன் என்ற நம்பிக்கை வரும். பதிதனுக நாம் இல்லாவிட்டால், பாவனன் என்று ஒருத்தன் நமக்கு எதற்கு? அதனுல் சம்சாரத்தில்சாரம்நிறைய இருக்கின்றது. நாம் எல்லாரும் நம் கடமைகளைச் சரியாகச் செய்தால், தானுகவே ஞானம் வந்து சாந்தி ஏற்படும்.

அடிக்கடி நான் சௌந்தர்ய லகரியைப் பற்றியும், ஸ்ரீ ஆச்சார்யரைப்பற்றியும் கூறி வருகிறேன். சௌந்தர்ய லகரியில் நூறு சுலோகங்கள் உள்ளன. இதில் நாற்பத்திரண்டாவது சுலோகத்திலிருந்து அம்பாளைப்பற்றி வர்ணிக்கிருர். அம்பாளின் கிரீடம், தேகம், இலாடம், முன்நெற்றி மயிர், நெற்றிப் புருவம் ஆகிய ஒவ்வொன்றையும் பற்றி மிக அழகாகக் கூறியுள்ளார். சௌந்தர்ய லஹரி என்ருல் அழகுப் பிரவாகம் என்று அர்த்தம். அம்பாள் நேராகத் தரிசனம் தந்தால், ஆசார்யர் எப்படி ஆனந்தத்தில் திளைப்பாரோ, அத்தகைய ஆனந்தத்துடன் சௌந்தர்ய லஹரியை இயற்றியுள்ளார். சிற்பி தன்னுடைய சிற்பத்திறன் முழுவதையும் பகவானுக்கு அர்ப்பணிக்கிருன். அதுபோல மகாகவி தம் வாக்கினுல் எழுத்துக்களைத் தொடுத்துப் பதங்களாக்கி, அதில் நவரசங்களைப் புகுத்தி, அதைச் சுலோகமாக்கி, அதைப் படிக்கும் மக்கள் படிக்கப் படிக்கச் சுவைகுன்ருது இருக்கும்படி சௌந்தர்ய லஹரியை அமைத்துள்ளார்.

அப்பேர்ப்பட்ட மகாகவி ஆசார்யர். அவர் வெறும் கவிமட்டுமல்ல; அருளும் நிறைந்தவர். ஆகவே அருட்கவியாவார். ஆசார்ய சுவாமிகளின் தரிசனத்தால் உலகம் க்ஷேமம் அடையும். அவரைத் தரிசனம் பண்ணும் பாக்கியம், உலக மக்களுக்கு முப்பத்திரண்டு வருஷங்கள் தான் கிடைத்தது. ஆனுல் உலகம் உள்ளவரையில் அழியாத சிறந்த கவிதைகளை, அவர் இயற்றியதன் மூலம், என்றும் தம்முடைய உருவம் மக்களின் மனக்கண்முன் நிலைபெறச் செய்துவிட்டார். அவருடைய கவிதைகளை எல்லோரும் படிக்கவேண்டும், கேட்க வேண்டும்.

என்னை எல்லோரும் புஷ்பங்களால் அலங்காரம் செய்கிறார்கள். நான் என்ன செய்வேன்? நான் உடனே சுலோகங்களால் பகவானை அலங்காரம் பண்ணவேண்டியதுதான். சௌந்தர்ய லகரியிலிருந்து இரண்டு சுலோகங்களைக் கூறி அதன் பொருளை இப்பொழுது விளக்குகிறேன். ஒருசுலோகத்தில் ஆசார்யர் அம்பாளின் நெற்றியைப்பற்றி வேடிக்கையாகவும் அழகுறவும் கூறியுள்ளார். ''அம்பாள் தலையில் கிரீடத்தை அணிந்துள்ளாள். அதில் பிறைச்சந்திரன் இருக்கிறது. அம்பாளின் நெற்றியும் பிறைச் சந்திரனைப்போல் உள்ளது. இவ்விரண்டினையும் ஒன்றை நோக்கி ஒன்று இருக்கும்படி அமைத்தால், முழுச்சந்திரனாகிய பூரண சந்திரனாக விளங்குவதைக் காணலாம்'' என்று கூறியுள்ளார்.

ஆசார்யர் அம்பாளைநோக்கி, ''உன் புருவத்தைப் பார்க்கிறேன். அது சற்று வளைந்திருப்பதுபோல் தோன்றுகிறது. அதோடு நெளிந்திருக்கிறாற் போல் இருக்கிறது. மனத்தில் ஏதேனும் கவலை இருந்தால், உடனே புருவம் வளையும். உன் மனத்தில் ஏதோ எண்ணமும் கவலையும் கொண்டிருக்கிறாய். அதனால் தான் உன் புருவம் வளைந்தும் இருக்கிறது. உனக்கு உலகத்தைப்பற்றி ஏதோ கவலை மனத்தில் ஏற்பட்டுள்ளது'' என்று கூறியுள்ளார்.

அழகான பொருளுக்கு மன்மதன் என்று பெயர். பொதுவாக அழகுக்கு மன்மதன் என்று பெயர். அம்பாளின் புருவத்தைப் பார்த்தால் மன்மதன் கையிலுள்ள வில்லோ என்று தோன்றுகிறது. அம்பாளின் புருவம் சாதாரணமானதல்ல. அது உலகமெல்லாம் கண்டு மயங்கும்வண்ணம் இருக்கிறது. அது மன்மதனின் வில்லாகும். மன்மதனுடைய வில்லுக்கு அடங்காதவர் இல்லை. அவனுடைய அழகில் மயங்காதவர் இல்லை. மன்மதனுடைய வில்லானால் அதுஒன்று தானே? ஆனால் இங்கு இரண்டு உள்ளனவே. அதோடு மட்டுமல்ல. இந்த வில்லுக்கு நாணைக் காணவில்லையே என்ற சந்தேகம் உண்டாகும். மன்மதனின் வில் கரும்புவில். அதற்குக் கருப்பு நாண் உள்ளது. வில் இருக்கிறதே. நாண்கயிறு உண்டா என்றால் நாண்கயிறு உண்டு. அது எதனால் ஆனது வண்டுகள் ஒன்றையொன்று தொடர்ச்சியாகப் பிடித்துக் கொண்டு மன்மதனின் கரும்பு வில்லுக்கு நாண்கயிறாக அமைந்துள்ளன. அம்பாளுக்கும் அப்படியேதான். அம்பாளின் புருவந்தான் வில். அவளுடைய அருளால்தான், மன்மதன் மீண்டும் உயிர்பெற்று, அவளால் உயிர்ப்பிக்கப்பட்டதனால் சகல நலங்களையும் அடைந்தான். அம்பாளின் வில்லின் நாண், அவளுடைய கண்களாகும். கண்களாகிய வண்டுகள் நாணாக அமைந்துள்ளன.

அம்பாளுக்கும் மன்மதனுக்கும் ஒரே மாதிரியுள்ள வில்லையும், நாண் கயிற்றையும் கண்டோம். ஆனால், அம்பாளுடைய வில் நடுவில் இரண்டாகப் பிரிந்திருக்கிறது, என்ன காரணம்? என்ற சந்தேகம் எழலாம். அம்பாளின் இரு புருவங்களுக்கிடையில் இடைவெளி உள்ளது. அதன் காரணம் யாது? அதுவும் ஒன்றுதான். எப்படி என்று கேட்கிறீர்கள். மன்மதன் தன் இடக்கையில் வில்லைப் பிடித்துக் கொண்டிருக்கிறான். வலக் கையினால் அம்பைப் பிடித்துக் கொண்டிருக்கிறான். அப்போது இடக்கை முஷ்டியினால், வில்லின் நடுப்பாகம் மறைக்கப்பட்டது. ஆகவேதான் ஒரே வில்லாகவும் ஒரே நாணாகவும் இல்லாமல் நடுவில் பிரிந்திருக்கிறது என்று ஆசார்யர் கூறியுள்ளார்.

உலகத்தைக் காப்பது தாயின் கடமை. ஆகவேதான் லோகமாதாவான அம்பாளின் புருவம், எப்பொழுதும் வளைந்து அம்பை எய்வதற்குத் தயாராக உள்ளது என்று ஆசார்யர் கூறியுள்ளார். வில், நாண் இரண்டையும் பார்த்தோம். அம்பு இல்லையா என்றால், மன்மதனுக்கு எப்பொழுதும் புஷ்பத்தாலான அம்புதான் உண்டு. அந்த அம்பு, பஞ்ச புஷ்பங்களால் ஆனது. அவை தாமரை, மல்லிகை, கருநீல புஷ்பம், மாம்பூ, அசோக புஷ்பம் ஆகியவை. வில்லோ கரும்பு: நாணோ வண்டுகள்; அம்போ புஷ்பம். இவைகளை வைத்துக் கொண்டு உலகம் முழுக்கத் தன் காலடியில் விழச்செய்தான் மன்மதன். இது அம்பாளின் அருளாலன்றி வேறு எவ்விதம் சாத்தியம்? எல்லா இந்திரியங்களையும் அம்பாளின் வசமாக்க வேண்டும். ரசம், மனம், ஸ்பரிசம் ஆகியவற்றால் மூன்று இந்திரியங்களையும் திருப்தி அடையச்செய்வது புஷ்பம். வண்டு புஷ்பத்திலிருந்துதான் நமக்குத் தேனை எடுத்துத் தரு

கிறது. நாக்குக்கும், வாசனைக்கும், தொடு உணர்ச்சிக்கும் கட்டுப்படாத உலகம் இல்லை. எல்லாம் அதில் அடங்கிவிடும். ஆகவே அம்பாள் கையில் எப்பொழுதும் வில் அம்பு இருக்கும்.

நாம் அலங்காரம் செய்துகொண்டால், நமக்கு அகம்பாவம் உண்டாகிறது. ஆனால் அதே அலங்காரத்தை அம்பாளுக்குச் செய்தால் பாவம் தொலையும். எல்லாவற்றிலும் நிறைந்தது சுவாமி. எல்லா அலங்காரமும் அம்பாளுக்குப் போடுவதால், நகைகளும் அழகு பெறுகின்றன. இவ்வாறு ஆசாரியர் ஒவ்வொரு சுலோகத்திலும் அம்பாளைப் பற்றிக் கூறியுள்ளார்.

இதற்கு அடுத்த சுலோகத்தில், ''அம்பாளுக்கு நெற்றியில் ஓர் கண் இருக்கிறது'' என்று கூறியுள்ளார். அது எப்பொழுதும் சிவப்பாக இருக்கிறது. அதற்கு அதிக நயனம் என்று பெயர். ''அம்பாளின் கண்கள், காதுகள் வரை நீண்டிருக்கின்றன. அவ்விரு கண்களும் காதாகிய ரசிகனிடத்தில் விளையாடிக்கொண்டிருக்கின்றன. அதைக் கண்ட நெற்றிக் கண், எப்பொழுதும் கோபத்துடன் சிவப்பாகவே இருக்கும்'' என்று கூறுகிறார்.

ஆசார்யர் அம்பாளை நோக்கி, ''எனக்கு ஒரு வரம் அருள்வாய். உன்னுடைய கடாக்ஷம் மிகவும் நீண்டது. நான் எல்லாவற்றிலும் கடைசியில் உள்ளேன். எப்படிச் சந்திரனின் ஒளி மாடமாளிகைகளையும், முட்புதர்களையும் ஒருங்கே பிரகாசிக்கச் செய்கிறதோ, அப்படியே எளியவனாகிய என்மீதும் நீ உன் கடாக்ஷத்தை அருள்வாய்'' என்று வேண்டுகிறார்.

ஆகவே எல்லா அலங்காரத்தைக் காட்டிலும், அம்பாளின் கருணை சிறந்தது. அதை விடச் சிறந்த அலங்காரம் இல்லை. அம்பாளின் கருணை பெற்றவர் முகமே, மிக்க அழகுடன் விளங்கும். இருதயத்திலிருக்கும் பரதேவதையின் கடாக்ஷம் இருந்தால், அது நமக்கு என்றும் ஆனந்தம் தரும். ஆகவே அவளைச் சரணடைவதே சிறந்த வழி. நாம் எப்போதும் நன்றாகவும் அழகாகவும் இருக்க, நமது உள்ளம் தூயதாக இருக்க வேண்டும். அப்போதுதான் நம்மை எல்லோரும் வாழ்த்துவர். ஆகவே அம்பாளின் பாத கமலங்கள் நமது இருதயத்தில் இருந்தால், அதுவே நமக்குச் சிறந்த பாக்கியமாகும். உலகம் முழுவதும் ஒரே பரமாத்மா தான். அவரே எல்லா உயிர்களுமாவார். ஆகவே இருதயத்தில் கருணையை அளித்து, நம்மை உய்விக்கும் பொருட்டு உங்களுக்கெல்லாம் அருள்புரிய அம்பாள் கருணை புரிவாளாக.

ரிக்வேதம், சுக்ல யஜுர்வேதம், கிருஷ்ண யஜுர்வேதம் சாமவேதம், அதர்வணவேதம்-இவ்வேதங்களின் சாகைகளுள் ஒவ்வொன்றிலும் ஒவ்வோர் உபநிஷத்தை அத்யயனம் செய்து, அதன் பொருளைத் தெரிந்துகொண்டு, இந்த ஜன்மத்துக்குள் பரமாத்ம ஸாக்ஷாத்கார அநுபவத்தைப் பெற வேண்டும். நாம் எல்லோரும் உபநிஷத்துக்களின் பொருளை அறிந்து அநுபவிக்கப் பரம உபகாரம் செய்தருளிய குருநாதர் ஸ்ரீ ஆதிசங்கராசார்ய சுவாமிகள். அவர்களுடைய தெளிவான பாஷ்யமாகிற வெளிச்சத்தைக் கொண்டு, நமது வேத சாகையின் உபநிஷத்தையாவது நாம் அறிந்து அநுபவிப்பது ஒன்றே, இந்த மானிடப் பிறவியின் இறுதிப்பயன். குருநாதரின் அருளால் நாம் இந்தப் பெரும்பயனை அடைந்து உய்வோமாக.

சம்புவினுடைய நடக்கும் மூர்த்தியே, ஸ்ரீ சங்கராச்சார்யார்கள். 'சம்' என்பதற்கு நித்திய சுகம் என்பது அர்த்தம். 'பூ' உற்பத்தியாகிய இடம்; ஊற்று உற்பத்தியாகிறது என்றால், ஜலம் வேண்டியவர்கள் அங்கே போய் எடுத்துக் கொள்ளவேண்டும். 'சம்பு' சம் உண்டாகிற இடம். சம்புவாக இருந்தால் இந்த யுகத்துக்குப் போதாது. அந்தச் சுகத்தைக் கையிலெடுத்து எல்லோருக்கும் கொடுக்க வேண்டும். 'சம்'மைச் செய்ய வேண்டும். கையில் எடுத்துக் கொடுத்தால்கூட வேண்டாம் என்பவர்கள் இருக்கிறார்கள். அதனால் சம்புவாகிய உட்கார்ந்த மூர்த்தி கூடாது. சங்கரர் சுற்றும் மூர்த்தி; அதுதான் இப்பொழுது வேண்டும்.

சிலர் 'சம்' என்ற சொல் ஐந்தைக் குறிக்கிறது என்றும், 'ர' என்பது இரண்டைக் குறிக்கிறது என்றும், 'க' ஒன்றைக் குறிக்கிறது என்றும் கூறி, ஆசார்யரின் அவதார மாதம், பக்ஷம், திதி இவற்றை அனுசரித்து இப்பெயர் வைக்கப்பட்டதெனக் கருதுகிறார்கள்; அதாவது 'ச' என்பது பஞ்சமி திதியையும், 'க' என்பது முதல் பக்ஷமாகிய சுக்ல பக்ஷத்தையும், 'ர' என்பது இரண்டாவது மாதமாகிய வைசாக மாதத்தையும், குறிப்பதாகச் சொல்லுவார்கள்.

ஸ்ரீ ஆதி சங்கரரின் திருவாக்கிலிருந்து வெளிவந்த ஸ்தோத்திரங்களில் ஒன்றையாவது நமது வாக்கினால் சொல்லி, அன்னாரின் திருவடிகளில் ஸமர்ப்பணம் செய்யவேண்டும்.



# அறிவியலும் அருளியலும்

(ந. ரா. முருகவேள், M A , M O. L,)

## முன்னுரை :

இந்தக் காலம் 'அறிவியற் காலம்'. இந்த இருபதாம் நூற்றாண்டு அறிவியல் நூற்றாண்டு எனப் பெரிதும் போற்றப்படுகிறது. இந்நாளில் எல்லாத் துறைகளிலும், அறிவியலானது பெரிதும் பரவி ஊடுருவி வருகின்றது. பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் என்னும் பேரறிஞர், "அறிவியல் நோக்கு" என்னும் தமது நூலிற் கூறுமாறுபோல, "அண்மையில் நூற்றைம்பது ஆண்டுகளின் காலத்துக்கு உட்பட்ட அறிவியல் வளர்ச்சியானது, தனக்கு முற்பட்ட ஐயாயிரம் ஆண்டுகளின் காலத்துக்குரிய பண்பாட்டைத் தகர்த்தெறிய வல்லதாக இன்று வளர்ந்து விளங்கி வருகின்றது" (Scientific Outlook, p. 9.)

இந்நாளில் அறிவியல் அல்லது விஞ்ஞானம் என்பது, மிகவும் வேகமாக வளர்ந்துகொண்டிருக்கின்றது. அறிவியலின் கிளைகளும் மிகப் பலவாக நாடோறும் விரிந்து பெருகி வருகின்றன. 'ஆய கலைகள் அறுபத்து நான்கு' என்பது, ஒருவகையிற் பழையதொரு வழக்கிழந்த கூற்றாக மாறிவிட்டது. நாளுக்கு நாள் அறிவியற் கலைக்கூறுகள், அளவிறந்தனவாக வளர்ந்து விரிந்துகொண்டே செல்கின்றன. சிறிய சிறிய பொருள்களையும் பற்றி, நிரம்ப நிரம்பத் தெரிந்து கொண்டிருப்பவனே 'அறிவியலிற் சிறப்பறிஞன்' எனப்படுகின்றான். பேராசிரியர் வில்ட்யூரண்ட் (Prof. will Durant) என்னும் பேரறிஞர், தாம் எழுதிய "தத்துவத்தின் கதை" (The Story of Philosophy) என்னும் நூலின் முன்னுரையில், பின்வருமாறு எழுதுகின்றார்.

"மனித அறிவானது, சமாளிக்க முடியாத நிலையில் விரிவாகி விட்டது. ஒவ்வோர் அறிவியலும், மேலும் பன்னிரண்டைப் பயந்து விட்டுள்ளது; ஒன்று மற்றொன்றைவிட மிக நுண்ணிதாகவும் உள்ளது. தொலைநோக்காடியானது (Telescope), வானத்தில் உள்ள விண்மீன்களையும் அவற்றின் இயக்கங்களையும் பற்றி, மனித மூளைக்கு எட்டாதபல செய்திகளை வெளிப்படுத்தியிருக்கின்றது. நிலநூல்(Geology) இதற்கு முன்பெல்லாம் ஆயிரம் என்ற அளவில் பேசப்பெற்று வந்தனவற்றை, நூறுநூறாயிரம் என்று பேசும்படி செய்து விட்டது. பௌதிகநூல் (Physics), மிகச் சிறிய பரமாணுவில் மிகப் பெரியதொரு பேரண்டத்தையே கண்டுவிட்டிருக்கின்றது. உயிர்நூல், (Biology) உடலின் ஒரு சிறு கண்ணறையில் (Cell), ஒரு சிறிய உலகையே கண்டுபிடித்து ஆராய்கின்றது. உடலியல்நூல், (Physiology), ஒவ்வோர் உறுப்பினும் எல்லையற்ற மறைபொருள் நுட்பத்தினை ஆராய்ந்திருக்கின்றது. மனநூல் (Psychology), ஒவ்வொரு கனவிலும் விந்தையான நிகழ்ச்சிகளை விவரிக்கின்றது. மனிதநூல் (Anthropology),

---

* காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் அவர்களின் அருளாதரவில், உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களுக்காக நிகழ்ந்த கோடை விடுமுறை நீதி போதனை வகுப்பில் ஆற்றிய சொற்பொழிவினைத் தழுவியது.

— ஆசிரியர்

ஐயத்திற்கு இடனின்றி மனிதனின் பழமையைப் புதிதாக வலியுறுத்துகின்றது. தொல்பொருள் நூல் (Archaeology), புதைந்த நகரங்களையும், மறைந்த அரசுகளையும் அகழ்ந்தெடுக்கின்றது. வரலாற்றுநூல் (History) எல்லா வரலாறுகளையும் பொய் என்று நிறுவுகின்றது. இறைநூல், (Theology), சரிகின்றது; அரசியற் கொள்கைகள், பற்பல சிதைகின்றன; புதிய கண்டுபிடிப்புக்கள் (Inventions), வாழ்க்கையையும் போரினையும் சிக்கலாக்குகின்றன. பொருளியற் கொள்கைகள், ஆட்சிகளைக் கவிழ்த்து, உலகத்தையே நிலைகலங்கச் செய்கின்றன!

முன்பெல்லாம் ஏனைய கலைகளைத் துணையாக அழைத்துப் பணிகொண்டு வந்திருந்த தத்துவநூல் (Philosophy), அவற்றை இணைத்து வைத்து இயக்கிவந்த தனது துணிவை இழந்து, உண்மை என்னும் போர் முனைகளினின்று தப்பி ஓடி ஒளிந்து, புரியாத குறுகிய சந்துகளிற் புகுந்து நுழைந்துகொண்டு, வாழ்க்கையின் சிக்கல்களுக்கும் பொறுப்புகளுக்கும் அஞ்சி நடு நடுங்கிப் பாதுகாப்பாக இருந்துவர முயல்கின்றது. இங்ஙனம் இன்று மனித அறிவானது, மனித மூளை தாங்க முடியாமல் திணறித் தடுமாறும் அளவுக்குப் பெருகி வளர்ந்திருக்கின்றது''. என்று இவ்வாறு அறிவியலின் வளர்ச்சி குறித்து மிக்க பெருமிதத்துடன் கூறுகின்றார், பேராசிரியர் வில்ட்யூரண்ட்!

## அறிவியலும் அருளியலும் :

இவற்றினலெல்லாம், அறிவியலுக்கும் அருளியலுக்கும் ஏதோ முரண்பாடு இருப்பது போல, நம்மிற் பலர் நினைப்பதும் பேசுவதும் உண்டு. அறிவியல் வளர வளர, அருளியலும் அருளியல் நம்பிக்கைகளும் தாமே மறைந்து விடும் என்றும், ஒருசிலர் வலியுறுத்திக் கூறுவர். இறையுணர்வும் நம்பிக்கையும் உடையவர்களைப் பிற்போக்காளர்கள், குருட்டு நம்பிக்கை கொண்டவர்கள் என்றெல்லாம் குறிப்பிட்டு, ஒரு சிலர் ஏளனமும் செய்யாநிற்பர். மற்றும் சிலர், தமக்கு இறையுணர்வும் நம்பிக்கையும் இல்லை என்று சொல்லிக்கொள்ளுதலை, ஒருவகை முற்போக்கு நெறியாகவும், நாகரிகப் பாங்காகவும் கடைப்பிடித்தொழுகுதலையும், நாம் காண்கின்றோம்.

ஆனால் உண்மையிலேயே ஆராய்ந்து பார்த்தால், அறிவியலுக்கும் அருளியலுக்கும் எத்தகைய இகலும் முரண்பாடும் இருப்பதாகச் சிறிதும் தோன்றவில்லை. அறிவியலும் அருளியலும் தமக்குள் எவ்வகையிலும் மாறுபட்டன அல்ல. அறிவியல், ஐம்புலன்களுக்குள் அகப்படும் புறப் பொருள்களையும், பருப்பொருள்களையும் (Phenomena) மட்டுமே, ஆராய்ந்தறிய முயலுகின்றது. அருளியலோ, ஐம்புலன்களுக்கு எட்டாமல் அப்பாற்பட்டு விளங்கும் அகப்பொருள்களையும், நுண்பொருள்களையும் (Noumena) ஆழ்ந்துணர்ந்து அநுபவிக்க வழி வகுக்கின்றது. இவ்வாற்றால் இரண்டினுடைய எல்லையும், குறிக்கோளும், செயல்முறைகளும், தனித்தனியாக விளங்குதல் காணலாம். ஆதலின் இவை இரண்டிற்கும் இடையே, எத்தகைய போட்டியும் பூசலும் ஏற்பட வாய்ப்பே இல்லை.

''எங்கே அறிவியல் செயலிழந்து முடிவுற்று நிற்கின்றதோ, அங்கேயிருந்துதான் அருளியல் தொடங்குகின்றது' (1). ''அறிவியல் என்பது வளர்ந்து கொண்டிருக்கும் ஒரு கலையே; அஃது இன்னும் குழவிப் பருவத்திலேயே இருந்து கொண்டிருக்கின்றது. அதன் வளர்ச்சி முறையிலும் ஆராய்ச்சி நெறியிலும், எத்தனையோ இடையீடுகளும் மாறுபாடுகளும் நேரலாம். ஆதலின், அறிவியல் அருளியலுக்கு முரண்பட்டதென்று நாம் முடிவு கட்டிவிடுதல், பொருத்தம் ஆகாது. மேலும், அறிவியல் என்பது இயற்கைப் பொருள்களின் இயல்புகளை விளக்கக் கூடுமேயன்றி, அதன் காரணங்களையும் அடிப்படைகளையும், விளக்கவல்லதன்று" (2). ''அறிவியல் எனப்படுவது வெறும் அறிவே; ஆனால் அருளியல் ஆகிய சமயமோ, அதன் பயனாகிய சிறந்த

---

(1) "Where Science ends, there religion begins".

(2) "Science cannot tell the ultimate "why" of things and events: Hydrogen and Oxygen combine to form water, but why should they? We all know Newton's Law of inverse squares. Science does not tell us why it cannot be the Law of inverse cubes. Natural laws are what they are but why they are not something else science does not say.

—W C. Dampier Whetham.

அநுபவமாக அமைவது. எனவே, அறிவியலும் அருளியலும் தம்முள் ஒன்றையொன்று தழுவிப் பிணைந்து நிறைவுறுவனவேயன்றி, முரண் படுவன அல்ல என்று உணரலாம் (3).

## ஐன்ஸ்டைன் :

''அருளியல் கலவாத அறிவியல் முடத் தன்மையுடையது; அறிவியல் கலவாத அருளியல் குருட்டுத்தன்மை வாய்ந்தது'' (4) என்பர், பேரறிஞர் ஆல்பெர்ட் ஐன்ஸ்டைன். ''அருளியலோடு இயைபில்லாத அறிவியல் அகந்தை மிக்கது; அறிவியல் சேராத அருளியல் மூட நம்பிக்கை பொருந்தியது'' (5) என்பர் பேரறிஞர் இராதாக்கிருட்டினன். ''வெறும் அரை குறை அறிவே இறையுண்மையை மறுத்துப் பேசும்; ஆழ்ந்து நிறைவுற்ற அறிவோ சமய வுணர்வில் தலைப்பட்டுத் தழைத்து நிற்கும்'' (6) என்று சாற்றுவர் பிரான்சிஸ் பேக்கன்' ' அறிவியற்றுறை அறிஞன் என்பவன் நாத்திக ஞக இருத்தல் இயலாது. இயற்கைப் பொருள் களை ஆராயஆராய, இறைவனின் அருமை பெரு மைகள் அறிவியல் அறிஞனுக்குத்தான் நன் கினிதுவிளங்கும்'' என்பது, அறிவியற்பேரறிஞர் களுள் தலைசிறந்தவர் ஆகிய ஆல்பெர்ட் ஐன்ஸ் டைனின் கூற்று. முதலிற் கடவுளுணர்ச்சி இல்லாமல் இருந்த விஞ்ஞானிகளிற் பலர், பின்னர் நாளடைவில் கடவுளுணர்ச்சி யுடைய வர்களாக மாறியிருக்கின்றனர்.

## ரெனி:புலாப் மில்லர் :

அறிவியற்றுறையின் போக்கு, இப்பொழு தெல்லாம் ஒரு திருப்பம் அடைந்து, சமயத்தை நோக்கித் தழுவி இணையவே முற்பட்டு வரு கின்றது. இதனை ரெனிஃபுலாப் மில்லர்என்னும் அறிஞர், பின்வருமாறு உருவக முறையில் அழகுற விளக்குகின்றார் :

'' அறிவுக்கும் (Reason) நம்பிக்கைக்கும் (Faith)-அறிவியலுக்கும் அருளியலுக்கும்-இடையே ஒரு வழக்கீடு ஏற்பட்டு நிலவி வந்தது. அறிவு வாதி யாக அமைய, நம்பிக்கையே பிரதிவாதியாக இருந்தது. அறிவுநலனும் பரந்த மனப்பான்மையும் கொண்ட, ஆண் பெண் இருபாலாரும் அடங்கிய ஒரு நடுவுநிலைக் குழுவினர், அதனை ஆராய்ந்தனர். மில்லிக்கன், எட்டிங்டன், ஜீன்ஸ், வொயிட்ஹெட், ஹால்டேன் போன்ற பேரறிஞர்கள் சான்றுரை கூறினர். அச்சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு, பிரதிவாதியாகிய நம்பிக்கையின் மீது கொணரப்பெற்ற வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

ஆனல் வாதியாகிய அறிவுதான், 'புரட்சி கரமான பிற்போக்கு மனப்பான்மை கொண்டுள்ள உண்மையான குற்றவாளி' என்ற ஐயுறவு நேர்ந்தது. ஆயினும் தன் குற்றத்தை யுணர்ந்துகொண்டு, மெய்யாகவே திருந்திவிடக்கூடிய நிலையில் மாறி வருவதனுல், அறிவு ஆகிய புதிய பிரதிவாதியின் மீது, அக்குற்றம் வலியுறுத்தப்படாமல், பரிவு

---

(3) ''Increasing number of important physicists, astrophysists, mathematicians, and biologists are now of the opinion that science and religion are not only not at all inimical to each other, but constitute only in their intimate inter-relation a complete picture of the world.''

—Rene Fulop Miller.

(4) ''Religion without science is lame science without religion is blind''

—Dr. Albert Einstein

(5) Religion without science is superstition; science without religion is arrogance".

—Dr. S. Radhakrishnan

(6) "I had rather believe all the fables in the Legends and the Talmud and the Alcoran than that this Universal frame is without a Mind. It is true that a little philosophy inclineth a man's mind to atheism, but depth in philosophy bringeth men's minds about to religion."

— Francis Bacon.

காட்டப் பெறுகின்றது'' (7) என அவர் 'அகிலத்தை அசைவித்த அருளாளர்கள்' என்னும் நூலிற் குறிப்பிட்டிருக்கின்றார். இஃது எதனைக் காட்டுகின்றது?

**மில்லிக்கன் :**

''அறிவியல் அறிஞர்களிற் பலர், இன்று இறையுணர்வும் நம்பிக்கையும் கொள்ளத் தலைப்பட்டுள்ளனர். அறிவியல், உலகாயத நிலையில் இருப்பதாக இன்றும் சிலர் பேசி வருதல் பொருந்தாது. இந்நாளைய விஞ்ஞானிகள் இறைவனை இயற்கையின் மூலம் உணர்ந்து துதித்துப் பரவி வழிபடத் தலைப்பட்டுள்ளனர்'' (8) என்று மில்லிக்கன் என்னும் அறிவியலறிஞர் இயம்புகின்றார்.

**மார்க்கோனி :**

அறிவியற் பேரறிஞர்களுள் ஒருவராகிய மார்க்கோனி என்பவர், தாம் காலை மாலை வேளைகளில் செய்யும் செபமும் பிரார்த்தனையும், எங்கேயோ பரமண்டலத்திலுள்ள பரமபிதாவுக்கு எங்ஙனம் கேட்டல் இயலும் என்று தமக்குச் சிறுவயதில் இருந்த ஐயப்பாடு, கம்பியில்லாத் தந்தியைத் தாம் கண்டுபிடிக்க முடிந்ததன் வாயிலாகத் தீர்ந்துவிட்டது என்றும்; அன்பர்கள் செய்யும் வேண்டுகோள்களை யெல்லாம், உலகம் எங்கணும் நீக்கமற நிறைந்து நிற்கும் இறைவன் செவிமடுத்து மனமிரங்கி அருள்புரிகின்றான் என்பது முற்றிலும் உண்மையே என்றும், குறிப்பிட்டிருக்கின்றார்.

**பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் :**

உலகப் புகழ்பெற்ற தத்துவ-கணிதப் பேரறிஞர் ஆகிய பெர்ட்ரண்ட்ரஸ்ஸல் என்பவர், 'சமுதாயத்தின் மீது விஞ்ஞானத்தின் விளைவு' என்னும் நூலில் கூறியிருப்பது ஈண்டுக் கருதியுணர்ந்து மகிழற்பாலது. ''இக் கால நிலைக்கு வேண்டுவன சில இருக்கின்றன; விலக்கப்பட வேண்டுவன சில உள்ளன. நம் காலநிலையில் அருளுணர்வும், மனித இனம் இன்பமாக வாழவேண்டும் என்னும் விருப்பமும் தேவைப்படுகின்றன. எல்லாவற்றிலும் மேலாகத் திடமான நம்பிக்கையும், புதியன படைத்தலில் ஆர்வமும், இக்காலத்திற்கு இன்றியமையாதன வாகும். நான் கூறப்புகும் செய்தியின் அடிப்படை அல்லது வேர் யாது எனின், மிக எளிமையானதும், மிகப் பழமை முறையில் அமைந்ததுமான ஒன்றேயாம். நான் கூற முற்படுவது மிகமிக எளிமையும், மிக்க பழமைமுறைவாய்ந்ததாதலும் பற்றி, ஒருசிலர் என்பால் புன்முறுவல் பூத்து ஏளனம் செய்யக்

---

(7) ''At the present time things are taking a decidedly different turn. The odds are clearly against reason. More and more often the witnesses called in from the laboratories and studies of exact science turn evidence for defense, and materialism is told many unpleasant things by its own experts and authorities.

The Jury, composed of intelligent and liberal modern men and women, bases its verdict on the views expressed by the witnesses Millikan, Eddington, Jeans, Whitehead, Haldane. The case against faith is dismissed.

Reason, the original plaintiff, is now suspected of being really the one that is guilty of reactionary backwardness, but the case is not pressed for it seems that the new defendant is honestly desirous of mending his ways?'.

—Rene Fulop Miller,
The Saints that Moved the World.

(8) ''Is there anyone who still talks about the materialism of science? Rather does the scientist join with the psalmist of thousands of years ago in reverently proclaiming. 'the Heavens declare the glory of God and Firmament showeth His handiwork ''.

— Robert Andrews Millikan.

கூடுமே என்று அஞ்சி, அதனைக் குறிப்பிடுவதற்குக் கூட, நான் பெரிதும் நாணம் கொள்ளுகின்றேன். நான் கருதும் பொருள்-அதனைக் குறிப்பிடுவதற்காக, அருள்கூர்ந்து என்னை மன்னித்துவிடுங்கள்-அன்பு, 'இறையியல் அன்பு' அல்லது சமய வுணர்வோடு கூடிய இரக்கவுள்ளம் ஆகும்.

இத்தகைய உணர்வை நீங்கள் பெறுவீர்களாயின், உங்கள் வாழ்க்கைக்கு ஓர் உயரிய நோக்கமும், செயல்களுக்கு ஒரு வழிகாட்டியும், மனவுறுதிக்கு ஒரு காரணமும், அறிவின் நேர்மைக்கு ஓர் இன்றியமையாத தேவையும் பெற்றவர்கள் ஆவீர்கள்'' (9).

இவ்வாறு, சமயநெறி வெறுப்பாளராக ஒரு காலத்தில் இருந்த, பேரறிஞர் பெர்ட்ரண்ட்ரஸ்ஸல் அவர்கள் கூறுவது, அறிவியல் அறிஞர்களிற் பலர் இந்நாளில், இறையுணர்வும் நம்பிக்கையும், வாழ்க்கைக்கு இன்றியமையாதன என்று உணர்ந்துகொண்டு மாறி வருகின்றனர் என்பதற்கு, இனிய நல்ல சான்றாகும்.

**முடிவுரை :**

இதுகாறும் கூறிவந்த சிலவற்றால், உண்மைச் சமயமும்விஞ்ஞானமும்-அறிவியலும் அருளியலும்-தமக்குள் ஒருபோதும் இகலி மாறுபடுவன அல்ல என்னும் செய்தி, அனைவர்க்கும் இனிது புலனாகும். ஆதலின், நாம் அனைவரும் அறிவியலையும் அருளியலையும் நன்கினிது தக்கவாறு போற்றி, வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து, நலம்பல பெற்றுய்ய முயலுவோமாக!

—ஆசிரியர்

---

(9) ''There are certain things that our age needs and certain things that it should avoid. It needs compassion, and a wish that mankind should be happy. It needs, above all, courageous hope and the impulse to creativeness.

The root of the matter is a very simple and old fashioned thing, so simple that I am almost ashamed to mention it, for fear of derisive smile with which wise cynics will greet my words The thing I mean-please forgive me for mentioning it-is love, Christian love, or compassion.

If you feel this, you have a motive for existence, a guide in action, a reason for courage, an imperative necessity for intellectual activity''.

—Dr. Bertrand Russel,
Impact of Science on Society, p. 114.

---

# செய்திச் சுருக்கம்

**சைவசித்தாந்த சாத்திர வகுப்பு:** லால்குடி என வழங்கும் திருத்தவத்துறையில், சமய நெறி பரப்பும் நன் நோக்குடன், வழக்கம்போல் இவ்வாண்டும், லால்குடி தம்பாச்சியாப் பிள்ளை அற நிலையத்தில், 1-5-71 முதல் 15-5-71 முடிய, 15 நாட்களுக்குத் திருக்குறள்வேள் திரு. ஜி. வரதராஜ பிள்ளை பி. ஏ., அவர்களின் நன்முயற்சியால், ஏற்பாடு செய்யப்பெற்றது. தருமை ஆதீனப் புலவர் மகாவித்வான் உயர் திரு. எஸ். அருணைவடிவேல் முதலியார் அவர்கள் சிவஞானபோத வகுப்பு நடத்தினார்கள். 1-5-71 அன்று, திருவையாறு பண்டித வித்வான் திரு. இராம. கோவிந்தசாமி பிள்ளை அவர்கள், வகுப்பைத் தொடங்கி வைத்தார்கள். வெளியூர்களிலிருந்தும் உள்ளூரிலிருந்தும் வந்திருந்து அன்பர்கள் பலர் பாடம் கற்றனர். 15-5-71 அன்று சிதம்பரம் திரு. ந. சிவப்பிரகாச தேசிகர் அவர்கள் தலைமையில், வகுப்பின் நிறைவு விழா மிகவும் சிறப்புற நடைபெற்றது.

— ஆசிரியர்.

# நம்மாழ்வார்

மகாவித்வான் ஸ்ரீமத் பி ப. அண்ணங்கராசார்ய சுவாமிகள்

ஆழ்வார்களுள் தலைவரான நம்மாழ்வார், வைகாசி மாதத்தில் விசாக நட்சத்திரத்தில், திருவவதரித்தவர். காரிமாறன், குருகூர்ச்சட கோபன், வகுளாபரணன், மகிழ்மாலை மார்பினன், ஸ்ரீசடாரி, பிரபந்நஜநகூடஸ்தர் இவைமுதலான திருநாமங்கள் இவர்க்குள்ளன. ஆழ்வார்களுள் இவர் ஐந்தாமவராகத் தோன்றினரெனினும் வைபவவிசேஷங்களினால் இவரே முதன்மைபெற்றவர். இவர் அவயவி யென்றும், மற்றையாழ்வார்கள் இவர்க்கு அவயவபூதர்களென்றும் ஸ்ரீ வைஷ்ணவ பரமாசார்யர்களால் கொள்ளப்பட்டிருக்கின்றது. ஒரு காலவிசேஷத்தில் திவ்வியப் பிரபந்தங்களெல்லாம் லோபமடைந்திருக்கையில், ஆசார்ய பரம்பரையில் தலைவரான ஸ்ரீமந்நாத முனிகள், இவ்வாழ்வார் விஷயமாக மதுரகவிகள் அருளிச் செய்திருந்த ''கண்ணிநுண்சிறுத்தாம்பு'' பிரபந்தத்தை நியமத்துடன் ஜபித்து, யோக தசையிலே இவரை ஸாக்ஷாத்கரித்து, இவர் முகமாகவே நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களையும் உபதேசிக்கப் பெற்றார். இவருடைய வாழித்திருநாமத்தில் ''நாதனுக்கு நாலாயிர முரைத்தான் வாழியே'' என்று அநுஸந்தானம் செய்யப்பட்டு வருகின்றது.

உலகில் பயிர்செய்பவன், தான் செய்யும் பயிர் பழுது பட்டாலும் சோம்பிக் கை வாங்காமல் பின்னையும் க்ருஷியையே பண்ணுமாபோல, கல்பந்தோறும் ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணிப் போராநின்ற எம்பெருமான்; அந்த ஸ்ருஷ்டி ஸபலமாகாமலிருந்தும் சிறிதும் விரக்தியடையாமல், என்றேனுமொருநாள் பலிக்கவேபலிக்கு மென்று உகந்து ஸ்ருஷ்டியையே பண்ணிக்கொண்டு வந்தும், படைத்த அந்த ஜகத்தில் அநுப்ரவேசித்தும், அறிய வேண்டும் அர்த்தங்களையெல்லாம் அறிவிக்குமதான சாஸ்த்ரங்களை உபதேசித்தும், "உறங்குவான்போல் யோகுசெய்த பெருமான்" என்கிறபடியே நித்ராமுத்ரையாலே ஜகத்ரக்ஷண சிந்தைபண்ணியும், சிந்தித்தவுபாயத்திற்குத் தகுதியாக 'மனிசரும்மற்றும் முற்றுமாய் மாயப் பிறவி பிறந்த' என்கிறபடியே மநுஷ்யாதி யோனிகளிலே கண்காண வந்து பிறந்தும் 'எனக்கு அடிமை யாவாருண்டோ' என்று இதுவேகாரியமாகத் தேடித்திரியா நின்றான். அந்தோ! ஒருவரும் அடிமைக்கிசைந்துவந்து அவனுடைய க்ருஷியை ஸபலமாக்கிற்றிலர். சிற்றின்பங்களிலே ஆழ்ந்து அழுந்திவருந்துவதே உலகவியற்கையாக இருந்தது. இவ்வுலக வியற்கையை மாற்றி ஸம்ஸாரி சேதநர்களைத் தன்பக்கலில் ஈடுபடுத்துவதற்குத் தன்னாலாகாதென்றும், மிருகத்தைக் கொண்டே மிருகத்தைப்பிடிப்பது போல ஸம்ஸாரிகளில் ஒருவரைக் கொண்டே ஸம்ஸாரிகளை வலைப்படுத்திக்கொள்ள வேணுமென்றும் நிச்சயித்து, அப்படிப்பட்ட அதிகாரியைத் தேடுகையில், ''அன்போடு தென்திசை நோக்கி'' என்கிறபடியே, தனது அன்பார்ந்த நோக்குக்குப் பள்ளமடையான தென் திசையிலே, இவ்வாழ்வார்

மேலே தன்னுடைய கடாக்ஷாம்ருத தாரையைப் பெருகவிட்டான். இதனை இவ்வாழ்வார் தாமும் அறிந்து, தமது முதற் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் ''பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழ வைத்தார் இவ்வகாலம்'' என்கிற பாசுரத்தினால் வெளியிட்டார்.

அந்தத் திவ்விய கடாக்ஷம் அடியாகத் தோன்றின இவ்வாழ்வாருக்கு அளவுகடந்த அதிசயங்கள் அமைந்தன. உபய விபூதியிலும் அடங்காத பெருமை வாய்ந்த பரப்பிரம்மத்தைத் தம்முடைய இருதயத்தின் ஏக தேசத்திலே அடக்கி "புவியும் இருவிசும்பும் நின்னகத்த, நீ என் செவியின் வழி புகுந்து என்னுள்ளாய், அவிவின்றி யான் பெரியன், நீ பெரியை என்பதனை யாரறிவார்? ஊன் பருகுநேமியாய்! உள்ளு'', (பெரிய திருவந்தாதி) என்கிற பாசுரத்தினால், எம்பெருமானோடே போராடும் படியான பெருமை பெற்றார்; (அதாவது) பிரானே! நீ பரப்பிரம்மம் என்று பேர் சுமக்கின்றாயே, இது உனக்குத் தகுமா! தன்னைக் காட்டிலும் பெரியதொரு வஸ்து வில்லாதபடி, தானேமிகப் பெரிதாகவுள்ள வஸ்துவன்றோ பரப்பிரம்மம் என்னத்தகும்; என் செவி வழியாகப் புகுந்து என்னுள்ளே அடங்கி நிற்கிறாய் நீ; உபய விபூதிமானான உன்னையும் அடக்கிக் கொண்டிருக்கிற நான் அன்றோ பெரியவன்; என்னுள் அடங்கி நிற்கிற நீ பெரியவனாகத் தகுமோ? என்று கேட்டால் விடையிறுக்க வல்லமை யில்லை யாயிற்று எம்பெருமானுக்கு. நாமெல்லாருங்கூடப் பகவானை இருதயத்தில் அடக்கிக் கொண்டுதான் இருக்கிறோம் என்று ஒவ்வொருவரும் நினைத்துக் கொள்ளலாமானாலும் ''கண்கள் சிவந்து பெரியவாய் வாயுஞ் சிவந்து கனிந்து, உள்ளே வெண்பல்இலகு சுடரிலகு விலகுமகர குண்டலத்தன், கொண்டல் வண்ணன் சுடர் முடியன் நான்கு தோளன் குனி சார்ங்கன், ஒண் சங்குகதை வாளாழியானொருவன் அடியேனுள்ளானே'' (திருவாய்மொழி 8-8-1)என்னும் படியும், இவர் திருவுள்ளத்தே எம்பெருமான் அடங்கி நிற்குந் தன்மை லோக விலக்ஷணமன்றோ.

இவருடைய திருவவதாரத்தை மகரிஷிகளும் தங்களுடைய புராண நூல்களால் குறிப்பித்திருக்கின்றார்கள். எங்ஙனே யென்னில் ஸ்ரீ பாகவதத்தில் பதினோராம் ஸ்கந்தத்தில் ஐந்தாவது அத்யாயத்தில் முப்பத்தெட்டாவது சுலோகந் தொடங்கி ஸ்பஷ்டமாகவே காணலாம். கிருதயுகம் முதலான முன்யுகங்களில் தோன்றியிருந்த சில மனிதர்கள் கலியுகத்தில் அவதரிக்க வேணும் என்று ஆசை கொண்டிருந்தார்கள். அவர்கள் ஸ்ரீமந்நாராயணனையே பர தெய்வமாகக் கொண்டவர்களாய்க்கலியுகத்தில் அவதரிக்கப் போகிறார்கள். ஏதோ சில சில இடங்களில் அவதரிப்பார்கள். தமிழ் நாடுகளிலோ வென்னில் பெரும்பான்மையாக அவதரிப்பார்கள். தாமிரபரணி, கிருதமாலை, பாலாறு, காவேரி என்னும் இப் புண்ணிய நதிகள் எவ்விடங்களில் பெருகுகின்றனவோ அவ்விடங்களில் (அவற்றின் கரையிலே) அவதரிப்பார்கள் - என்று இந்த சுலோகங்களில் கூறப்பட்டுள்ளது. இந்த நதிகளை யெடுக்கும் போது தாமிரபரணி நதியை முந்துற முன்னம் எடுக்கையாலே நம்மாழ்வாருடைய திருவவதாரமே மகரிஷிகளால் முக்கியமாகக்கருதப்பட்டதென்பது வெளிப்படை. ஆழ்வார்களிற்சிறந்த நம்மாழ்வாரும் ஆசாரியர்களிற் சிறந்த மணவாளமாமுனிகளும் தாமிரபரணிக்கரையில் திருவவதரித்த மஹா புருஷர்களன்றோ.

இவ்வாழ்வாரைச் சாக்ஷாத் பகவதவதாரமே யாகவும் கொள்வர். பகவான் கிருதயுகத்தில் தத்தாத்ரேயனும் பரசுராமனுமாய் பிராஹ்மண குலத்தில் தோன்றினான். அவனே அடுத்த த்ரேதாயுகத்தில் க்ஷத்ரியனான தசரத சக்கரவர்த்திக்குப் பிள்ளையாய்த் தோன்றினான்; அவனே த்வாபரயுகத்தில் - வைச்யப்ராயரான வஸுதேவர்க்கும், பசுரக்ஷணத்தாலே ஸாக்ஷாத் வைச்யரான நந்த கோபர்க்கும், பிள்ளையாய்த் தோன்றினான். இப்படி யுகக்ரமத்தில் வர்ணக்கிரமமாக அவதரித்த பரமபுருஷன் நான்காவது யுகமான இக்கலியுகத்தில் நான்காவது வருணத்திலே அவதரிக்க வேண்டி ஆழ்வாராக அவதரித்தனனோ! என்று சங்கிக்க ஔசித்யமுண்டு. வேதங்களைப் பரிஷ்கரிப்பது முதலிய காரியங்களுக்காக வியாசர் முதலானோரிடத்தில்ஆவேசித்

தாற்போலே, திராவிடவேத ப்ரவர்த்த நார்த்த மாக இவர் பக்கல் ஆவேசித்தபடியோ என்றும் சங்கிப்பர்கள். இவ்விபூதியைத் திருத்துகைக் காக ஈச்வரனுடைய நியமனத்தினல் நித்ய முக்தர்களிலே யொருவர் வந்து அவதரித்த படியோ! என்றும் சங்கிப்பர்கள்.

மஹர்ஷிகளென்று கொண்டாடப்படுகிற வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளிற் காட் டிலும் ஆழ்வார் மிக்க மேம்பாடு உற்றவர்; அவ்விருடிகள் கனி காய் கிழங்கு சருகு காற்று தண்ணீராகிய இவற்றையே தாரக போஷக போக்யங்களாகக் கொண்டிருந்தார்கள். எம் பெருமான் விஷயமான காதலே வடிவெடுத்தவ ரான ஆழ்வாரோ என்னில் ''உண்ணுஞ்சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம் கண்ணன்'' என்று தாமேயருளிச் செய்தபடி, தாரக போஷக போக்கியங்களெல்லாம் எம் பெருமானே யாயிருப்பர். ரிஷிகளின் சரித் திரங்களைக் காணும்போது அவர்கள் சம்ஸாரப் பற்று அருதவர்கள் என்பது விளங்கும். வஸிஷ்ட பகவான் புத்திரனிறந்த வருத்தத் தினல் மரணத்தைவிரும்பிமலையிலேறிவிழுவது, நெருப்பிலே குதிப்பது, கழுத்திலே கல்லைக் கட்டிக்கொண்டு கடலிலே விழுவது, ஆக விப்படி யெல்லாம் தடுமாறினர் என்றும், வேதவ்யாச பகவான் புத்திரவியோகம் பொறுக்க மாட்டாமல் புத்திரனே! யென்று வாய்விட்டுக் கூப்பிட்டு அழுதுகொண்டு காணப் பெருமையால் அலமந்து திரிந்தாரென்றும் கதைகள் காண்கின்றன. ஆழ்வாரோ வென் னில், எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தினல் கண்ணும் கண்ணீருமாய் ''எங்கே காண்கேன் ஈன் துழாயம் மான் தன்னை'' என்று கடலும் மலையும் விசும்பும் துழாவி அலமந்து சிந்தை கலங்கித் திருமாலென்றழைப்பதே போது போக்காயிருந்தவர்.

ரிஷிகளின் அத்யவஸாயத்திற் காட்டிலும் ஆழ்வாருடைய அத்யவஸாயம் பரம விலக்ஷண மாயிருக்கும். எம்பெருமானைப் பெறுவதேபேறு என்றும், அதற்குக் கர்ம ஞானபக்திகளே உபாய மென்றும், இந்திரன் முதலிய தேவதைகளுக்கு அந்தர்யாமியான ஈச்வரனே உத்தேச்யனுகை யாலே அந்தத் தேவதைகளும் அநுவர்த்திக்க வுரியர் என்றும், இப்படி ரிஷிகள் பேசியுள்ளார் கள். ஆழ்வார் அருளிச் செய்வதோ வென் னில், கைங்கர்யமே புருஷார்த்தமாகவும், அதனைப் பெறுவிப்பது ப்ரபத்தியேயாகவும் இதரதேவதைகள் அநுவர்த்திக்கத் தகாதவ ராகவுமாயிற்று. ரிஷிகள் இயற்றிய நூல்களிற் காட்டிலும் ஆழ்வார் திருவாய் மலர்ந்தருளிய திவ்யப் பிரபந்தங்களுக்கு நெடுவாசியுண்டு - வால்மீகி மஹரிஷியானவர் ராமகதையைச் சொல்லுவதாக ராமாயணமென்று தொடங்கி, கங்கையின் உற்பத்தி ஸுப்ரஹ்மண்யனுடைய உற்பத்தி புஷ்பகவர்ணநம் முதலான கதை களைப் பரக்கப்பேசி வாக்கில் அசுத்திபடைத் தார். வேதவ்யாஸர் மஹாபாரதத்தை நாரா யணகதை என்பதாகத் தொடங்கி பீஷ்மர் முதலான பற்பலருடையஉற்பத்திப்ரகாரங்களை விரிவாகப்பேசுகையாலும், ''பூசல்பட்டோலை'' (யுத்த புஸ்தகம்) என்னும்படி பாரதப்போர் வகைகளையே பரக்கநின்று வருணித்தபடியாலும் அசத்கீர்த்தநத்திலே மிகவும் பரந்து வாக்கை அசுத்தமாக்கிக்கொண்டார். இப்படிப்பட்ட அவத்யங்களில் ஏகதேசமும் ஆழ்வார் அருளிச் செயலில் இடம்பெற்றிருக்கவில்லை. ''மாற்றங் களாய்ந்து கொண்டு மதுசூத பிரானடிமேல்'' என்று தாமேபணித்தபடி எம்பெருமான் விஷய மல்லாத ஒரு சொல்லும் கலசாதபடி, அத்தனை யும் பகவத் விஷயமேயாக அருளிச் செய்த பாசுரங்களே மலிந்திருக்கும். இவரது பாசுரங் களின் பெருமையைப் பற்றிக் கம்பர் சடகோப ரந்தாதியில் கூறியுள்ள செய்யுள்களில் ஒன்று கேளீர்,

''அந்தமிலா மறையாயிரத்து ஆழ்ந்த அரும் பொருளைச்
செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத் தேவர்களும்
தந்தம் விழாவும் அழகும் என்னும் தமிழார் கவியின்
பந்தம் விழாவொழுகும் குருகூர் வந்த பண்ணவனே!''

என்பதனல், நம்மாழ்வார் நமக்குப் புரிந்தருளிய நலங்கள் பலவும் புலனுகும்.



# பறம்புமலைப் பாரிவள்ளல் விழாக் கவியரங்கில்

# முதல்வர் கலைஞரின் தலைமைக் கவிதை!



[பிரான்மலை என வழங்கும் பறம்புமலையில், தமிழ்நாடு தெய்விகப் பேரவைத் தலைவர் தவத்திரு. குன்றக்குடி அடிகளார், M.L.C. அவர்கள், திருவுளப் பாங்கின் வண்ணம், 5-5-71 அன்று நடைபெற்ற பாரிவள்ளல் விழாவை ஒட்டி நிகழ்ந்த கவியரங்கில், நமது பேரன்பிற்கும் பெருமதிப்பிற்கும் உரிய தமிழக முதல்வர் மாண்புமிகு கலைஞர் திரு. மு. கருணாநிதி அவர்கள், கவியரங்கத்திற்குத் தலைமை தாங்கிப் பாடிய தலைமைக் கவிதை, இங்கு வெளியிடப் பெறுகின்றது.

—ஆசிரியர்.]

வணக்கம்:

மாதவர்க்கு ஒருபாகம்—
மாது, அவர்க்கு ஒருபாகம்—
(மாதொரு பாகன்—சிவனார் !)
மாதவர்க்கு ஒருபாகம்—
இந்த விழாவில் குன்றக்குடி
மடத்தின் தலைவர் அடைகின்ற மகிழ்ச்சியிலே
மாதவர்க்கும் ஒருபாகம் உண்டன்றோ ?
ஏனெனில், இது முடித்து எனை
இழுத்துச்செல்ல இருக்கின்றார் சிவகங்கை...

அந்த மாதவர்க்கு வணக்கம்...
இங்குள்ள அன்பிலார்க்கு வணக்கம்.
என்பால் அன்பிலார் இருப்பின்
அவர்க்கும் வணக்கம்—பெரிய

மருதனையார் மதுரை முத்து மேயர்க்கும்
சின்ன மருதாம் தென்னரசுத் தோழர்க்கும்
வணக்கம்—

தமிழ்த்துறவி என்கிறார் நும்மை—
நான் ஏற்பதில்லை— எதைத் துறந்திடினும்
தமிழை மட்டும் துறந்திடேன் எனச் சொல்லும்—நீவிர்,
தமிழ்த்துறவி அல்ல!
தவத்திரு அடிகளாரே! ஏற்றிடுக என் வணக்கம்—

இன்று மதியம்;
மதுரையில் நான் தூங்காமல்
இக்கவியரங்கப்பாடல்தனைத்
தீட்டிவந்தேன்......
அங்கு,
மதுரையில் இருந்த சங்கம்—
இங்கு எழுந்து வந்தது போல்
இருக்கின்ற புலவர் குழுவே!
அனைவர்க்கும் வணக்கம்
சொல்வேன்—
எனக்கிருக்கும் எத்தனையோ வேலைக்கிடை
இதுதான் கவிதை
எனக்கிறுக்கும் எனை அழைத்து
என்பால்
தனக்கிருக்கும் பேரன்பை வெளிப்படுத்த
—பெருந்
தவக் கிறுக்கர் அடிகளார் அழைத்திட்டார்.
கன்றுக்குடி இல்லாமல் பால் கறக்கும் வித்தைகற்ற
சென்னைவிட்டு,
குன்றக்குடி ஆதீனக் கொடி பறக்கும் பறம்புமலை
வந்துவிட்டேன்.
மலைக்கிருக்கும் அழகெல்லாம் மாரியாலே—இந்த
மலைக்கிருக்கும் அழகெனிலோ மன்னன் பாரியாலே
இங்கு—பலாச்
சுளைக்கிருக்கும் சுவைகூட அவனளித்த
கொடை என்பேன்.
அவனரசில் எலியின்
வளைக்கிருக்கும் பாதுகாப்பாய் பூனையென்பர்—
வயலின்
களைக்கிருக்கும் மதிப்பு கூடத் தன்
பொருளின்பால் வைக்கா வள்ளல்—
முல்லைக் கொடிக்கிருக்க வீடாக இழையணித்தேர்
ஈந்த அண்ணல்

ஃ ஃ ஃ

கதைகளிலே படித்திருப்போம் கலகம் செய்
—நாரதரும்

கந்தவேலன் முன் சென்று உன் காதலுக்
—கேற்ற நங்கை
வள்ளி என்பேன் வடிவழகி, வட்டநிலா!
அள்ளி உண்பாய்ப் பார்த்துவிட்டால் என்று கூற
முருகனுமே,
துள்ளியோடித் தோகையினைக் கண்டிடவே
புள்ளி மயில் மீதேறிப் புறப்பட்டு அலையலானான்
கற்பனை கேளீர்—
ஈங்கோர் கற்பனை கேளீர்!
நெடுந்தொலைவு பயணம் செய்தும் நேரிழையைக்
—காணாமல்
பறம்புமலைக் கருகே வந்து பல்இழந்த
பாட்டி ஒருத்தியிடம்
—மீசை
அரும்புகட்டா முருகனுமே வள்ளி எங்கே எனக்கேட்க
பாட்டியோ; மலைமீது ஏறிடுக! கண்டிடலாம்!
எ॰ றவோர் பதிலை
நீட்டி முழக்கி நடந்திட்டாள்— நெடுநல் வேல்முருகன்,
எறிந்த,
ஈட்டியின் வேகமென ஏறினான் மலையின் மீது
வள்ளி எங்கே? வள்ளி எங்கே? என அலைந்த
வடி வேலனிடம்...வந்திடுக, கண்டிடுக...எனக்
காட்டினார் அங்குள்ளோர், மலையெல்லாம்
வள்ளிக்கிழங்கு!
கிழங்களின் குறும்பு என்னே...உண்ணும்
கிழங்கினை வள்ளியென்றே உரைத்து நமை
ஏய்த்தாளே பாட்டியென்று—முருகன்
ஏமாந்து பறந்துவிட்டான்.

ஃ ஃ ஃ

ஏமாற்றமில்லாமல் திரும்பலாம் பரிசு பெற்றுப்
பூநாற்றம் கமழ்கின்ற பறம்பு மலைப் பாரி கண்டால்
—எனப்
பாரேற்றும் பெயர் பூண்டான்—தமிழுக்குச்
சீரேற்றும் கபிலனது உறவுங் கொண்டான்.
புவிவேந்தன் பாரிக்குத் தமிழ்க்
கவி வேந்தன் கபிலன் தான் உயிர்த் தோழன்.
மதியிரண்டாய்ப் பிரிந்து வந்து
மகளிர் எனப் பிறந்தது போல்
—பாரி வள்ளல்
அதியழகுச் சிலையிரண்டைப் பெண்களாகப்
பெற்றெடுத்தான்.
பதியாவோம் அவர்க்கென்று பெண்கேட்டுப்
பலமன்னர், கிடைக்காமல்

படை கொண்டு பறம்புமலை தாக்கித்
தோற்றார்
—தேன்
அடை உடைந்து கிளம்பிவிட்ட ஈக்களன்ன
மூவேந்தர், பறம்புமலைத்
தடை தகர்த்துப் பாரி உயிர் குடித்துவிட்டார்
நாடி வந்து கேட்டபோது பெண் இல்லை யென்று
போர் நடத்தி, பின்னர்;
தேடி நொந்து திசை நாலும் மன்னர்களைக்
கேட்டலுத்து
இறுதியிலே,
காரிமன்னன் செல்வர்க்குப்
பாரிமக்கள் துணை வியானர்
கபிலரது முயற்சியினால்!
நாடாண்டதன் தோழன்—தமிழ்
நாயகனும் பாரிக்குத் தான் செய்யும்
தனிக் கடமை முற்றிற்றென்று
ஏடாண்ட பெருங்கவிஞன் கபில மேலோன்
'எந்தன் பாரியுடன் இனிசேரத் தடையில்லை'
எனக்கருதி வடக்கிருந்து உயிர்நீத்தான்.
சாகின்றான் நண்பன் எனில் அவன் தலையில்
அவசரமாய்க் கல் ஒன்றைப் போடுகின்ற
ஆருயிர்த் தோழனொருடு இந்நாளில்!
—எதிரியிடம்
தோற்றிடுவான் தோழன் எனில் துரோகம்
செய்து
எட்டப்பர் ஆகின்ற "நல்லோர்" உண்டு
நம்நாட்டில்—அந்த
நன்றிகெட்டோர்க்கும் நல்லறிவு புகட்டுகின்ற
பாடமன்றோ
கபிலர்—பாரி கனிந்த நட்பு!
உண்டிக்கொடை, பொற்கொடை, ஊர்திக்கொடை
என
ஒன்பான் கொடை வழங்கும் தமிழ் மரபில்
முந்நூறு
ஊர்க்கொடையைப் பாடுநர்க்கு அளித்த
—பாரிபுகழ்,
உலவு தென்றல் காற்றாக வீசுகின்ற
மாண்பு கண்டேன்.

ஃ ஃ ஃ

வள்ளல்களை வாயார வாழ்த்திவிட்டால் போதாது;
வாழ்த்துபவர்
உள்ளங்களும் வண்மையுடன் திகழ்தல் வேண்டும்.
குவித்துவைத்த பொற்குவியல் இருந்தால்தான் கரங்
குவித்துவரும் எளியோர்க்கு வழங்கிடலாம்,
—எனக்கூறல் சாக்குப் போக்கு.
அவித்துவைத்த கிழங்கிரண்டில்—பசியால்
தவித்துழலும் ஏழைக்கு ஒன்றீதல் பெருங்கொடையாம்.

மனிதர்,
இரந்துண்ணல் தகாதென்று
இங்கிருக்கும் தமிழரசு
சிறந்திடுக பிச்சைக்காரர் ! செய்தொழில்
கற்றுத் தேர்ந்திடுக ! என—
விடுதிபல
திறந்திடவே திட்டமிட்டுப்பணி புரிதல்
ஊக்கு விக்க உமது மனம் அன்பால்
சுரந்திடவே வேண்டுகின்றேன்.
முல்லைக்குத்தேர் ஈந்து பாரியானுன்—
ஒரு ஏழைப்
பிள்ளைக்கு மோர் ஈந்து அவனில் நீர்
பாதியாவீர் !

ஃ ஃ ஃ

பாரி விழா சிறப்பதற்குப் பாவலர் தம்
கவியரங்கில்
வாரியே வழங்கிடுவர் வண்ணத்தமிழ்ப்
பெருமையெல்லாம்—

ஃ ஃ ஃ

அன்னைத் தமிழின்,
தொன்மை
எளிமை
வண்மை
வலிமை
இறைமை
புதுமை—என
எத்தனையோ 'மை' களையே பாடிடலாம்.
இத்தரையை முத்தமிட்டார் தேர்தலிலே
பலபேர் !
அவரெல்லாம்—பாடுகின்றார்
மை—மை—என்றே !
ரஷ்ய மை—ரசாயன மை—
மக்கள் தீர்ப்பை மதியா மை யாலே
வெற்றி
உண்மையை மறுப்பவர்க்கு
இம்மையிலும்—மறுமையிலும்
என்றுமே தோல்விதான் !
இம் 'மை'யிலும் மறு 'மை'யிலும்
என்றுமே தோல்விதான் !—

ஃ ஃ ஃ

அன்னை தமிழின் ''தொன்மை'' என்று
தென்னை நல்கிடும் இளநீர்போல்,....
இங்கோர் கவிஞர் தருகின்றார்.....
இளஞ்சேரக் கவிஞர் அவர்பேர் என்பேன்......

ஃ ஃ ஃ

தமிழின் 'எளிமை' எனும் தலைப்பினிலே
தண்ணொளிசேர் பாட்டொன்று
—கேட்டிடுக இப்போது!......
அமிழ்தாம் கவிகள் இயற்றுகின்ற
அருமை நண்பர் சவகர்லால் . . .
பொழிவார் இங்கே
கவிதை மழை !

ஃ ஃ ஃ

'வண்மை' என்னும் தலைப்பினிலே
எண்ணக் கவியொருவர்
பாடிடுவார்—
உண்மை யொன்று சொல்கின்றேன்—
அவர் இருபெயரில் ஒரு புலவர்.
முத்து சம்பந்தம்—

ஃ ஃ ஃ

அன்னை தமிழின் 'வலிமை' எனும்
தலைப்பினிலே
கவிஞர்
அய்யாக்கண்ணு பாடிடுவார் !

ஃ ஃ ஃ

அடுத்து—இறைமை!
பாடுபவர்—சிங்கார வடிவேலன்!
சிக்கலிலே வாழும் சிங்கார வேலா—
எனப்பாட்டு கேட்டிருப்பீர்—
தமிழில் இறைமை
எனும்
தலைப்புச்
சிக்கலிலே—இவர் சிறப்புக் கண்டிடுவோம்.

ஃ ஃ ஃ

அடுத்து 'புதுமை'
கொடியரசன் பாரி வள்ளல்...கோட்டைக்
கொடியரசன்—முல்லைக்
கொடியரசன்—அவன்
முடியரசன்!

குடியரசு தழைக்கின்ற இக் காலம்

இங்கோர்

முடியரசன் இருக்கின்றார்...

இவர் கவிமுடியரசர்...

விரைவில்

முடியரசு!...

ஃ ஃ ஃ

முன்னுரையில் நான் சொன்ன

கருத்தெல்லாம்—மீண்டும்

முடிவுரையில் சொன்னதாய்க் கொண்டிடுக!

தமிழின் 'தொன்மை' தனைத்

தரணிக்கு உணர்த்திடுவோம்—

'எளிமை' தனைப் பயன்படுத்தி

எல்லார்க்கும் தமிழ் அறிவு

ஊட்டிடுவோம்—

வரைமுறையற்ற 'வண்மை'யினால்

தமிழ் வளம் வீழாது காத்திடுவோம்.

'இன்பத் தமிழ் எங்கள் பகைவர்க்கு

வேல்' என்று முழங்கிடுவோம்...

'வலிமை' காட்டிடுவோம்!

'இறைமை' தனைத் தமிழின்பால் காண்பதிலும்

ஏழைத்தமிழர் சிரிப்பினிலே

காண்பதுவே சிறப்பென்போம்—

பயிற்று மொழித் தமிழாகப்

பரவிவிட்டால்;

பால் நிலவுப் பயணத்தைத்

தமிழ் மொழியில் கற்றுநாமும்

பல 'புதுமை'களைச் செய்திடுவோம்!

வணக்கம்.



# திருவாய்மொழியின் தெளிபொருள்

நாவீறர் திரு. ஸ்ரீ காந்தராமாநுஜ சுவாமிகள்,
புனிதநிலையம், காரைக்கால்.

### முன்னுரை :

நலமார் திருமால்நெறியின் சம்பிரதாயம் 'சத் சம்பிரதாயம்' என்று தொன்று தொட்டு வழங்கப்பெறுகின்றது.

''சத் சம்பிரதாயம் தாமுடையோர் கேட்டக்கால்
மெச்சும் வியாக்கியைதான் உண்டாகில் — நச்சி
அதிகரியும் சீர்வசன பூடணத்துக் கற்ற
மதியுடையீர் மத்தியத்தராய்''

என்று, சுவாமி மணவாள மாமுனிகள், உபதேச ரத்தினமாலையில் அருளிச் செய்வது கொண்டு, இவ்வழக்காற்றை நன்கு உணரலாம்.

### சத் சம்பிரதாயம் :

இக்கொள்கை, பிரபன்னஜன கூடஸ்தரான சுவாமி நம்மாழ்வார் தொடங்கி இடையறுது வருவதுபற்றி நமது சமயம் சத்சம்பிரதாயம் என்று நன்கினிது அழைக்கப்பெறுகின்றது. 'சத்' என்ற சொல் இறைவனை உள்ளவாறு உணர்ந்த ஒப்பற்ற ஒரு பெரியாரைக் குறிப்ப தாகும். அது, ஈண்டு நமது பரமாசாரியராகிய சுவாமி நம்மாழ்வாரைக் குறிப்பிடுவது ஒன்ருகும்.

சம்பிரதாயம் எனப்பெறுவது, நலமான தோர் சீரிய உபதேசம் என்ற பொருளினைத் தருவது ஒன்ருகும். எனவே, அறப்பெரிய அருளாளரான சுவாமி நம்மாழ்வார் அருளிச் செய்தருளிய நலமான சீரிய உபதேசமே ஸ்ரீவைணவம் எனப்பெறுகின்றது. நலமான உபதேசமாவது, உபதேசிப்பவன் உபதேசம் பெறுவோனிடத்தில் யாதாயினும் ஒரு பயனை யும் கருதாது, அவனுடைய ஆன்ம உய்வையே பயனகக் கருதி, தனது அளப்பரிய கருணைப் பெருக்கால் உபதேசம் செய்தலாகும். அப்பெற்றிய நலமான சீரிய உபதேசங்களைத் திருவாய்மொழியில் கவினுறக் காணலாம்.

பிறவிப்பிணி மருத்துவரான சுவாமி நம்மாழ்வார் பிறர்படும் துன்பம் கண்டு ஆற்ற மாட்டாது அருள்கொண்டு உபதேசித்தருளு கின்ருர் என்பது, அவர்தம் அருளிச் செயல் பலவற்றிலும் தெளிய அறியப்பெறலாம். இப்பேருண்மையை சுவாமி ஸ்ரீ அழகிய மணவாளப் பெருமாள் நாயனர் அருளிச்செய்த ''ஆசாரிய இருதயம்'' என்ற திப்பிய நூலில், ஆராவமுதமான திவ்விய சூரணையில் பின்வரு மாறு அருளிச் செய்வராயினர்.

### திப்பிய சூத்திரம் :

''தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடி பணிந்தவர்க்குமே இவை யுள்ளது'' என்பது, ஆசாரிய இருதய ஸ்ரீ சூக்தி யாகும். உபதேசம் பெறுவோனது ஆன்ம நலனையே நாடி, உயர்வற வுயர்ந்த பரம கருணை யுடன் உபதேசித்தருளிய ஐம்பெரும் சீரியர்தம் மேன்மை இதனில் தெளிவுற எடுத்துக்காட்டப் படுகிறது. இச் சூத்திரத்தில் 'தாய்க்கும்'

என்றது, உலகமாதாவான சீதாபிராட்டி யாரைக் குறிப்பதாகும்.

### ஸ்ரீ சீதாப்பிராட்டியார் :

சீதாப்பிராட்டியார் தன்மாட்டு மாபெருங் குற்றத்தை இழைத்த இராவணனைக் குறித்து, "நீ நலமுடன் வாழ விரும்பினுயாகில் ஸ்ரீஇராகவப் பெருமானைச் சரணம் அடைவாயாக! இராகவப் பெருமான் சரணம் அடைந்தவரிடம் அளப்பரிய அன்புடையவர்'' என்று உபதேசித் தருளியுள்ளனர்.

### பிரகலாத ஆழ்வான் :

மகன் என்றது, ஸ்ரீ பிரகலாத ஆழ்வாரைக் குறிக்கும். பத்துடையடியவர் அனைவர்க்கும் முதல்வரான ஸ்ரீ பிரகலாத ஆழ்வான், தாம் சொல்லியருளிய, தேனும் பாலும் கன்னலுமான எம்பெருமான் திருநாமங்களைச்சகியாமல், தனக்கு மிகக் கொடுமையான தண்டனைகளைச் செய்ததன், தந்தையான இரணியனைக் குறித்து, "இறைவன் எங்குமுளான் ஒருவன்; அவனே உயிராகக் கொண்டுள்ள இவ்வுலகில் யாதானும் ஒரு உயிரினிடமும் பகை கொள்ளலாகாது. எனவே, அவனிடத்தும் பிற உயிர்களிடத்தும் அன்புசெய்வாயாக'' என்று உபதேசித் துள்ளனர். மற்றும், ஆண்டிருந்த அசுரப் பிள்ளைகளுக்கும் உபதேசம் செய்துள்ளனர். ''எல்லோரிடத்தும் அன்புடையோராக இருங்கள்; அனைவரிடம் அன்பு செய்வதே இறைவனுக்குச் செய்யப்பெறும் திருத்தொண்டாகும்'' என்றும் உபதேசித் தருளியுள்ளனர்.

### விபீடண ஆழ்வார் :

இனி 'தம்பி' என்றது, இராவணன் தம்பியான விபீடண ஆழ்வாரைக் குறிக்கும். இச் சீரியோர் தம் தமையனுன இராவணன் உலக சரண்யனுன இராமபிரான் பக்கல் செய்த குற்றத்தைப் பொறுது, அவனுக்குச் சில நல்வார்த்தைகளைச் சொல்லியருளினர். அது போது, இராவணன் இவரைநோக்கி, ''நீ என் குலத்திற்கே அழுக்காய்த் தோன்றியுள்ளாய், இப்போதே இவ் இலங்கையைவிட்டுப் பேர்காதிருப்பாயாயின் உன்னை என் பாணங்களுக்கு இலக்காக்குவேன்'' என்று நிந்தித்துச் செவிசுடும் வார்த்தைகளைச் சொல்லினன். அங்ஙனம் நிந்தித்த இராவணனை நோக்கி ''அரசே! இவ்வுலகில் இன்ப வார்த்தைகளைச் சொல்லுவார் பலருண்டு, நன்மை பயக்கும் நல் வார்த்தைகளைச் சொல்லுவார் இவரன்ருே? இதனை நீ அறிவாயாக, நீ யமனுடைய வலிய பாசத்திஞல் கட்டுண்டு வருந்துவதை யான்கண்டு ஆற்ற மாட்டேன்: ஆகையால் உனக்கு நன்மையைச் சொன்னேன்'' என்று உபதேசித்தருளினர்.



### மாறன் பராங்குசன் :

அடுத்து 'இவர்க்கும்' என்றது, நம் குலநாதரான சுவாமி நம்மாழ்வாரைக் குறிக்கும். மாறன் பராங்குசரான சுவாமி நம்மாழ்வார், இறைவன்மாட்டு அன்பு செய்யாத அறிவிலிகளைக் குறித்து, ''வீடுமின் முற்றவும் உம்முயிர் வீடுடையானிடை வீடு செய்மினே'' என்றும், ''நீர்நுமது என்றிவை வேர் முதல் மாய்த்து இறைசேர்மின்'' என்றும் நல்லுபதேசங்கள் செய்தருளியுள்ளனர்.

### சுவாமி எம்பெருமானுர் :

'இவரடி பணிந்தவர்' என்றது, ஆசாரிய சார்வபௌமரான சுவாமி எம்பெருமானுர் என்னும் இராமாநுசரைக் குறிப்பதாகும். சுவாமி எம்பெருமானுர், முன்னேர்கள் ஒராண் வழியாக உபதேசித்துப் போந்த பழைய முறையை அழித்து, ஆசையுடையோர்க்கு எல்லாம் உபதேசிக்கும் ஆணையை அளித்துள்ளனர். திருக்கோட்டியூர் நம்பிகள் மாட்டுத் தாம் வருந்தி, படாதனபட்டுக் கேட்டு வைத்த அரும்பொருள்களையெல்லாம் உலகோர் அறிய வெளியிட்டு அருளினர். இறைவன்பக்கல் அன்பிலாதாரையும் வலிய ஆட்கொண்டு, ''உங்கள் பிறவிகள் பலவும் வீணே கழிந்தன; ஆதலின் இப்பிறவியிலாவது இறைவனைச் சார்ந்து உய்தி பெறுங்கோள்'' என்று வற்புறுத்தி உபதேசம் செய்தருளியுள்ளனர். இதனுல், ''காரேய் கருணை இராமாநுசன்'' என்று கொண்டாடப்

பெறுகின்ருர். மேலும், இது பற்றியன்ருே, ''இராமாநுச நூற்றந்தாதி'' அருளிச் செய்த திருவரங்கத்தமுதனர், சுவாமி எம்பெருமானுர்க்குப் ''பாமன்னுமாறன் அடிபணிந்து உயர்ந்தவன்'' என்னும் சீரிய திருநாமத்தைச் சூட்டி மகிழ்வாராயினர்.

ஆகவே, பிராட்டியார், பிரகலாத ஆழ்வான், விபீடண ஆழ்வார், சுவாமி நம்மாழ்வார் எம்பெருமானுர் ஆகிய இவர்களுக்கு "இவை'' உள்ளன என்று உரைத்தருளிய வாற்றை இனிதின் உணரலாம். ஈண்டு ''இவை யென்றது, முன் சூத்திரத்தில் கூறப்பெற்ற ஞாலத்தார் பந்தபுத்தியும், அனர்த்தம் கண்டு ஆற்ருமையும், மிக்க கிருபையுமாகும்'' என்றதனைக் குறிப்பிடுவதாகும். இச்சீரிய குணங்கள் சுவாமி நம்மாழ்வாரிடத்தில் பொலிந்து விளங்கியிருந்தன. ''ஞாலத்தார் தமக்கும் வானத்தவர்க்கும் பெருமானே'' என்றதனுல் வானத்திலுள்ள நித்திய சூரிகளுக்குப் பெருமானுயிருப்பது போன்று, ஞாலத்திலுள்ளார் தமக்கும் பெருமானுயிருக்க, அவனைச் சார்ந்து இன்பம் துய்க்காமல் உலகினர் இழந்துகிடக்கின்றனரே; இவர்கள் இறைவனை இழக்கலாகாது என்ற சம்பந்த ஞானமும்; ''கண்டாற்றேன் உலகியற்கை கடல் வண்ணு! என்றதனுல் உலகினர்படும் துன்பங்கண்டு பொறுக்கமாட்டாமையும்; இறைவனுல் குற்றங்கண்டு கைவிடப்பெற்ற உலகினரையும் ''நின் கண் வேட்கை யெழுவிப்பனே'' என்றவாறு திருத்திப் பணிகொண்டருளிய ''அருள்கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே'' என்ற கரைபுரண்ட காருண்யமும் என்பனவாம் என்பதை இனிதுணரலாம்.

### திவ்விய பாசுரம் :

இப்பெற்றிய, இனிய அருளாளரான இவர் உபதேசிக்குமிடத்து, மக்கள் ஒருவகையில் அறிவுடையவர்கள், தீயனவற்றை விலக்கி நல்லனவற்றைப் பெற்று மகிழவே எண்ணுகின்ருர்கள். ஆதலால் இவர்களுக்கு நல்லன இவை, தீயன இவை என்று எடுத்துக்காட்டி விளக்குவோமாயின், தீயனவற்றை விடுத்து நல்லனவற்றையே பற்றுவார்கள் என்று திருவுளம் பற்றி, ''நீங்கள் விரும்பும் ஐம்பொறி இன்பங்கட்குரிய பொருள்களும், அவற்றை நுகர்தற்குரிய உடலும் நிலையில்லாதவை; வீடுபேற்றின்பமே நிலையானது, ஆதலால் நிலையான அவ்வின்பம் அடைதற்கு என்னுடையது என்று, பிற பொருளின் மேற் செல்லும் புறப்பற்றையும், யான் என்று உடலின் மேற்செல்லும் அகப்பற்றையும் அறவே ஒழித்து இறைவன் திருவடிகளையே நாடுங்கள்'' என்று உபதேசித்தருளுகின்ருர்.

''நீர்நுமது என்றிவை
வேர் முதல் மாய்த்து இறை
சேர்மின் உயிர்க்கதன்
நேர்நிறை இல்லே''

தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்ன சொல்மாலைகளான திருவாய்மொழி ஆயிரத்துள் "வீடுமின்'' எனத் தொடங்கும் இரண்டாம் திருவாய்மொழியிலுள்ள இப்பாசுரம், நுதலுவனவற்றை இனிது காண்போம்.

நீர் நுமது என்றிவை வேர்முதல் மாய்த்து நீர் என்று உடலைப்பற்றி நினைக்கின்ற அகப்பற்றினையும், நுமது என்று பிறபொருளைப்பற்றி நினைக்கின்ற புறப்பற்றையும் முற்றும் ஒழித்து; இறைசேர்மின்-இறைவன் திருவடிகளை நினையுங்கள்; உயிர்க்கு-இவ்வுயிர்க்கு; அதன் நேர்நிறை இல் — அவ்வாறு இருவகைப்பற்றுக்களையும் ஒழித்து இறைவன் திருவடியடைதலை ஒத்ததும் மிக்கதுமான பயன் வேறென்றுமில்லை.

அகப்பற்று புறப்பற்றுக்களை யான் எனது என்று கூறுவது மரபாக இருக்க, ''நீர் நுமது'' என்றுஅருளிச்செய்வான் ஏன் எனின், தன்னைப் பற்றிக் கூறும்போது, யான் எனது என்று சொல்லவேண்டியவற்றை முன்னிலையில் உள்ளாரை நோக்கிச் சொல்லுவதாயின், நீர் நுமது என்றே கூறவேண்டுமாதலின் அங்ஙனம் அருளிச் செய்வாராயினர். இனி, சான்ருேர் பெருமக்கள், பிறரைப்பற்றியனவாக இருந்தாலும், தீய நிகழ்ச்சிகளைத் தம் வாயாற் கூறவும் கூசி, அவற்றை வேறுவிதமாக மாற்றிச் சொல்லுதல் இயல்பு. அம்முறையில், இருவகைப்பற்றுக்களையும் உணர்த்தும் யான் எனது என்னும் சொற்களைத் தம் திருவாயால் சொல்லவும் கூசி, ''நீர், நுமது'' என்று அருளிச் செய்தருளுகின்ருர்.

ஈண்டு, ''நான் எனது என்று தம் வாக்காலே சொல்லமாட்டாரே, நாக்குவேம்என்று''

எனவரும் ஈட்டின் வியாக்கியான ஸ்ரீசூக்தி அறிதற்குரியதாகும். ''வேர் முதல் மாய்த்து'' என்பதில் வேர் முதல் என்னும் இரண்டும் ஒரே பொருள் தருவன; ஆதலின், வேர்-பக்க வேர், முதல் - ஆணிவேர் எனக் கொண்டு இங்கு அகப்பற்றுக்களை ருசியோடும், வாசனையோடும், நீக்கி என்பது கருத்தாகக் கொள்ளுதற்குரித்து. ருசியாவது என்னவென்றால், தான் வேண்டாமெனத் துறந்த பொருளை, ஒரோ வழி மீண்டும் தம் நினைவோடு விரும்புந் தன்மையாகும். வாசனையாவது; அவ்வாறு துறந்த பொருள்களைத் தம் நினைவின்றிப் பற்றுந் தன்மை எனப்பெறும். எனவே, இவ்வாறு மீண்டும் நினைவோடும் நினைவின்றியும் பொருள்களின்மேற்பற்றுச்செல்லாவண்ணம் இருவகைப் பற்றுக்களையும் விடுதல் வேண்டும் என்று அருளிச் செய்யும்படி என்று உணரத்தக்கதாகும்.

சேர்தல்-இறைவன் திருவடிகளை இடையறாது நினைத்தல். ''மலர் மிசையேகினான்'' என்ற திருக்குறளில் பரிமேலழகர், சேர்தல் - இடையறாது நினைத்தல் என்று கூறுவது, ஈண்டு நினைவிற்குரியதாகும். கப்பல் ஒன்று கடலில் திசை தடுமாறிச் சென்று கொண்டிருக்கும் போது ஒரு கரையைச் சேர்ந்தால், அங்ஙனம் கரை சேர்ந்ததே பெரும் பயனுதல் போன்று, அவன் திருவடிகளை நினைத்தாலே பெரும் பயனாதலின் ''சேர்மின்'' என முடித்து, மீண்டும் ''அதற்கு'' என்று தொடங்கியருளுகின்றார்.

இவ்வாறு இறைவன் திருவடிகளை நினைத்தல், முதலில் பிறவிப் பெருந் துன்பத்திற்கு மருந்தாய்ப், பின் நிலையான இன்பமும் ஆதலின் அதற்கு ஒத்ததும் மிக்கதுமான பயன்வேறில்லை என்று அருளிச் செய்கின்றார். இதனால் துறவு என்பது ஐம்பொறி யின்பங்கட்கு உரிய பொருள்கள் இல்லாத இடத்திற் சென்று வாழ்தல் என்பதன்று. நீருக்குள் மூழ்கியிருந்து பெருந்தவம் செய்து கொண்டிருந்த சௌபரியார் என்னும் முனிவர், நீருள் உலாவின மீன்களையும் அதன் குஞ்சுகளையும் கண்டு, மன உறுதி தளர்ந்து ஐம்புல ஆசை உடையவரானார் என்ற வரலாறு அறியத்தகுந்ததாகும். அதனால் உடலினும் உடலைப்பற்றிய பொருள்களிலும், யான் எனது எனும் நினைவை அறவே விடுதலே துறவாகும் என்று துறவின் உண்மையை, இத்திருப்பாசுரத்தால் இனிது விளக்கியருளுகின்றார் என்பது அறிந்து மகிழ்தற்குரியதாகும்.

---



தமிழக முதல்வர் மாண்புமிகு. கலைஞர் திரு. மு. கருணாநிதி அவர்கள், திருக்கழுக்குன்றம் வேதகிரீசுவரர் கோயிலில், வரவேற்றுச் சிறப்பிக்கப் பெறுதல் (29—4—71)

# மதிப்புரை

—o—

**சின்மய தீபிகை :**

திருக்கயிலாய பரம்பரைத் திருத்துறையூர் வீரசைவ ஆதீனத்தைச் சார்ந்தவரும், அதன் 20-ஆம் பட்டம் ஸ்ரீ சொக்கலிங்க சிவப்பிரகாச பண்டார சந்நிதிகளுக்குக் குருவாய் விளங்கியவருமான ஸ்ரீமத் முத்தைய சுவாமிகள் அருளிய அரும்பெறல் நூல். இது, ஷை ஆதீனத்தின் 22-ஆம் பட்டம் சிம்மாசனாதிபதி ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய சிவப்பிரகாச பண்டார சந்நிதி அவர்களின் அருளாணைப்படி, பதிப்பிக்கப்பெற்றது. இராவ்சாகிப் திரு. நல். முருகேச முதலியார் பி. ஏ., அவர்கள் இந்நூலுக்குச் சிறந்த முறையில் குறிப்புரைகள் எழுதி, தகுந்த முகவுரையுடன் திருத்தமாகப் பதிப்பித்துள்ளார்கள். அருட்டிரு வடலூர் இராமலிங்க அடிகளார் இந்நூலை ஆராய்ந்து 1857-ஆம் ஆண்டு பதிப்பித்துள்ளார்கள் எனின், இந்நூலின் சிறப்பை யாவரும் இனிது உணரலாம். நெஞ்சு அறிவுறுத்தல், யாக்கை நிலையாமை, புலனடக்கம், இறப்புத் துன்பம், குருவருள்நிலை, அணைந்தோர் தன்மை என்னும் பலவகைப் பொருள்கள் பற்றி, இந்நூல் சுவைமிக விளக்குகின்றது. பக்தர்களுக்குப் பயன்படும் சிறந்த நல்ல நூல். கிடைக்குமிடம்: திருத்துறையூர் வீரசைவ ஆதீனம், திருமுதுகுன்றம் (விருத்தாசலம்), விலை ரூ. 1-00.

**காமகோடி வாணி:**

இது காஞ்சி காமகோடிபீடம் ஸ்ரீ ஆசார்ய சுவாமிகளின் அருளாசியுடன், ஸ்ரீ பக்த சமாஜத்தினரால் வெளியிடப்பெறுகின்றது. இந்திய தத்துவம் இலக்கியம் பண்பாடு ஆகியவற்றை பரப்பி வளர்க்கும் குறிக்கோளுடன் மாதந்தோறும் வெளியிடப்பெறும் ஆங்கில இதழ். சமய உணர்வையும் தத்துவத்தையும் ஒழுக்கத்தையும் வளர்க்கும் சிறந்த பல கட்டுரைகளைக் கொண்டுள்ளது. இந்து சமயத்தின் பலவகைச் சாத்திரக் கருத்துக்களும், இதன்கண் அழகுற ஆராய்ந்து தொடர்ந்து வெளியிடப்பெற்று வருகின்றன. மிகவும் சிறந்த பயனுள்ள நல்ல சமயப் பத்திரிகை. ஒவ்வொரு இதழும் 48 பக்கங்கள் கொண்டது. நல்ல தாளில் நன்கினிது வனப்புறப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஆண்டுச் சந்தா ரூ. 5-00. சந்தா அனுப்ப வேண்டிய முகவரி: திரு. நிர்வாக ஆசிரியர், காமகோடி வாணி, 6-ஏ, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம் சென்னை-33.

**அருட் பெரும் ஜோதி ;**

இது ஒரு சிறந்த தெய்வீக மாத இதழ். ஓய்வுபெற்ற மாவட்ட நீதிபதி திரு. வி. பலராமையா, பி. ஏ. பி. எல். அவர்களை ஆசிரியராகக் கொண்டது. அருட்டிரு வடலூர் இராமலிங்க அடிகளாரின் சமரச சன்மார்க்க நெறியினையும், சித்த மருத்துவத்தின் சிறப்பினையும் விளக்கிப் பரப்பும் குறிக்கோளுடையது. 32 பக்கங்கள் கொண்டது. தனி இதழ் விலை 50 காசுகள் ஆண்டுச் சந்தா ரூபாய் 6-00. சந்தா அனுப்பவேண்டிய முகவரி; ஆசிரியர், அருட்பெரும் ஜோதி, அரும்பாக்கம், சென்னை-29.

—ஆசிரியர்.

# கைங்கரியம்

[ஸ்ரீ. உப. வே. வித்வான் பிரம்மதேசம்
தூப்புல் நரசிம்மாசார்ய ஸ்வாமி, காஞ்சீபுரம்].

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தில் சொல்லப்பெறும் பரம புருஷார்த்தம் பரிபூரண ப்ரஹ்மாநுபவத்திஞல் ஏற்படும் கைங்கரியம் என்பதுதான். 'கைங்கரியம்' என்ருல் என்ன? யாருக்குச் செய்தால் கைங்கரியம் ஆகும்?

கைங்கரியம் என்பது ஒருவருக்குச் செய்யும் வேலேதான். ஆனல், ஒருவருக்கு மற்றவர் ஊதியத்துக்காகவோ, பரஸ்பரம் சகாயமாகவோ, பிரீதியினலோ, ஒரு பிரதிப் பிரயோஜனத்தை அபேக்ஷித்தோ, ஓர் உறவையிட்டோ செய்யும் காரியங்கள் கைங்கரியங்கள் என்னப் படுவதில்லே. இவற்றில் சிலவற்றுக்குக் கைங்கரியம் என்ற பெயர் வந்தாலும் (அதாவது மாதாபிதாக்களுக்குப் பிள்ளேகள் செய்யுமவை. பர்த்தாவுக்குப் பத்தினி செய்யுமவை), இவை ஒரு காரணத்தையிட்டு ஏற்பட்டவை யாகையால் ஸோபாதிகமான கைங்கரியங்கள் எனப் படும். ஒருகாலும் ஒழிக்க ஒழியாத ஸம்பந்தம்- அதாவது பகவான் ஸ்வாமி, நாம் தாசன் என்ற ஸம்பந்தம் - உள்ள பகவானுக்குச் செய்யும் வேலேகள் தாம் நிருபாதிகமான (ஒரு காரணத்தையிட்டு வாராத) கைங்கரியம் எனப்படும். இந்த நிருபாதிகமான கைங்கரியத்தைத்தான் பரம புருஷார்த்தம் என்கிருேம் நம் ஸித்தாந்தத்தில்.

'கைங்கரியம் (நிருபாதிகமாகவோ ஸோபாதிகமாகவோ) என்பது, ஒருவனுக்குச் செய்யும் வேலேதானே? வேலே செய்வதென்பது கஷ்டமாகத்தானே இருக்கும்? வேலே செய்ய யாராவது ஆசைப்படுவார்களா? இப்படி இருக்க அது எப்படிப் புருஷார்த்தமாகும்?' என்ருல் கேண்மின். ஒருவன் தன்னே எந்த வகையாக நினேத்துக்கொள்கிருனே அதற்கேற்ப அவனுக்குப் புருஷார்த்தங்களும் துக்கங்களும் மாறும். தன்னே ஒருவன் தேவதையாக நினேத்தால் அவனுக்கு அம்ருதம் ஆகாரமாக ஆகிறது. மனுஷ்யஞக நினேத்தால் அன்னம் ஆகாரமாகிறது. பசுவாக நினேத்தால் புல் ஆகாரமாகிறது. தன்னே ஸத்தாக நினேத்தால் தாஸ்யமே தாரகமாகவும் போஷகமாகவும் ஆகிறது. ஆகையால் எம்பெருமானுக்குத் தன்னேத் தாஸஞக நினேத்தால், தாஸன் யஜமானனுக்கு வேலே செய்வது தான் ஸ்வரூபமாகையால் இவனுக்கு அந்த வேலேயே புருஷார்த்தமாகிறது.

கைங்கரியம் இரு வகைப்படும். ஒன்று, சாஸ்திரம் பகவானுக்குக் கைங்கரியம் பண்ண வேண்டும் என்று சொல்லியிருப்பதனுல் அந்தச் சாஸ்திரவிதியை மீறக்கூடாதாகையால் அதன் படி பகவானுக்குக் கைங்கரியம் பண்ணுவது. இது 'ஸ்வரூபக்ருததாஸ்யம்' என்று சொல்லப் படும். மற்றென்று, பகவானுடைய கல்யாண குணங்களுக்கு வசப்பட்டு, அப்படிப்பட்ட பரம புருஷனுக்குக் கைங்கரியம் பண்ணுவிட்டால் தனக்கு உயிர் நிற்காதாகையால் தன் ஆத்மா

தரிப்பதற்கு எம்பெருமானுக்குக் கைங்கரியம் பண்ணுவது. இதை, 'குணக்ருததாஸ்யம்' என்று சொல்லுவார்கள். இந்த இருவிதமான ரீதிகளையும் லோகத்தில் செய்யும் வேலைகளில் சுலபமாகக் காணலாம்.

ஒரு எஜமானன் இருக்கிறன். அவன் மிகவும் கோபிஷ்டனுகவும் நன்றி கெட்டவனு கவும் க்ரூரமான ஸ்வபாவத்தை உடையவனுக வும் இருந்தால் அவனிடம் வேலை செய்கிற வர்கள், 'ஐயோ ! இந்த எஜமானனிடம் வேலை செய்ய என்ன துரதிருஷ்டம் பண்ணினேம் ? நாம் என்ன பண்ணுகிறது? அவன் எஜமான், நாம் கீழ் ஊழியன். அவனிஷ்டப்படி செய்ய சட்டம் விதிக்கிறது. செய்துதானே தொலைக்க வேண்டும்?' என்று வேண்டா வெறுப்பாகச் செய்வார்கள். இதைத்தான் 'ஸ்வரூபக்ருததாஸ யம்' என்பார்கள். (அதாவது அவன் மேலதி காரி, நாம் கீழ் அதிகாரி என்ற ஸ்வரூபம்.) அந்த எஜமானனே பரம குணவானுகவும் நன்றி யுடையவனுகவும் நல்ல ஸ்வபாவத்தை உடைய வனுகவும் இருந்தால், 'இந்த எஜமானனிடம் நாம் வேலை செய்ய என்ன பாக்கியம் செய் தோம் ! இவன் என்றைக்கும் எஜமானனுகவும், நாம் கீழ் ஊழியர்களாகவும் இருக்க மாட் டோமா?' என்று எண்ணி மிகவும் சந்தோஷத் துடனும் ஆர்வத்துடனும், அவன் இட்ட வேலைகளைப் பிரீதியுடன்செய்வார்கள். இதைத் தான் 'குணக்ருததாஸ்யம்' (அதாவது குணத் தில் ஈடுபட்டு வேலை செய்வது) என்பார்கள். இதன்படியே பதி பத்தினிகளிடமும் கண்டு கொள்வது.

இவ்விரண்டில் குணக்ருததாஸ்யம் மிகவும் சிறந்தது. இதைத்தான் ஸ்ரீமத் ராமாயணத் தில் இளையபெருமாள் அநுஷ்டித்துக் காட் டினர். ராமன் தமையனர். லக்ஷ்மணர் தம்பி. தமையனருக்குத் தம்பி கைங்கரியம் செய்ய வேண்டிய முறையை அநுஸரித்து லக்ஷ்மணர் ராமனேடு காட்டுக்குச் சென்று கைங்கரியம் செய்தார் என்று எல்லாரும் நினைப்பார்கள். லக்ஷ்மணர் அப்படி நினைக்கவில்லை. ''நான் ராமனுடைய குணங்களுக்குத் தோற்று அவ ருக்கு அடிமை செய்ய வந்தேன்'' என்கிறர் லக்ஷ்மணர். ஸ்ரீஸ்வாமி தேசிகனும், 'குணத்தி ஞல் உயர்ந்த ஒருவனிடத்தில் அந்தக் குணங் களின் ஸாரத்தை அறிந்த மற்ருெருவனுக்கு, லக்ஷ்மணனுக்கு (இளைய பெருமாள்) ராமனி டத்தில் தாஸ்யம் ஏற்பட்டமாதிரி, தாஸ்யம் குணத்துக்குத் தோற்றுச் செய்யும்படி ஆகும்' என்கிறர் ரஹஸ்யத்ரயஸாரத்தில். குணங் களுக்குத் தோற்றுச் செய்யும் கைங்கரியம் தன் னேற்றமுடையதாக இருக்கும் என்பது ஸ்ரீஸ்வாமி தேசிகனின் ஸ்ரீஸூக்தி.

ஸகல ஐச்வர்யங்களையும் ராஜபோகங்களை யும் உதறித்தள்ளி, ஸீதை ராமனைக் காட்டுக் குப் பின்பற்றினதை அநஸூயை புகழ்ந்து பேசியபோது, ''ராமனுடைய குணங்களுக்குத் தோற்று அயோத்யாபுரவாஸிகள் எல்லாரும் பின்பற்றினபோது நான் தொடர்ந்ததில்என்ன அதிசயம் இருக்கிறது? இதே ராமன் குணமில் லாதவனுக, காதுகனுக, க்ரூரனுக, மஹாகோப வானுக இருந்து, அந்தச் சமயத்தில் அவனைப் பின்பற்றி நான் காட்டுக்கு வந்திருந்தால் என்னைப் புகழலாம். இப்போது என்ன ஏற்றம் இருக்கிறது?'' என்று பதிலளித்தாள் சீதாபிராட்டி. ஆகையால் எம்பெருமானின் குணங்களுக்குத் தோற்றுக் கைங்கரியம் செய் வது தன்னேற்றமாக இருக்கும். 'எம்பெரு மான் கடியனுகவும், கொடியனுகவும்இருந்தால் கூட, அவனை விடமுடியாமல் அவனுக்குக் கைங் கரியம் செய்ய ஆசைப்படுகிறது என் நெஞ்சம்' என்கிறர் நம்மாழ்வார். அப்படியிருக்க, பரம கல்யாண குணநிதியாக உள்ள எம்பெருமா னுக்குக் கைங்கரியம் செய்வது பரமபுருஷார்த்த மாகத் தடை என்ன இருக்கிறது?

கைங்கரியம் செய்யும்போது, நமக்கு யஜ மானனை பகவானின் திருவுள்ளம் அறிந்து அதன்படி செய்வதுதான் கைங்கரியம். ''இந்த வேலையைச் செய்'' என்று அவன் பணிக்க, அதன்படி செய்வதுதான் கைங்கரியம். இந்தக் கைங்கரியத்தை, 'நான் செய்கிறேன். எனக்காகச் செய்கிறேன்' என்ற அஹங்கார மமகாரங்கள் கலக்காதபடி, 'இந்தக் கைங்கரியத்தினுல் பிர

தானப் பலனை அடைகிறவன் திருமகள் கேள்வ ஞன நாராயணன்தான். நான் அவன் பிரீதி யடைவதைப் பார்த்துச் சந்தோஷப்படுகிறவன். எப்படி ஒரு பதிவிரதை பர்த்தாவுக்குத் தான் செய்யும் பணிவிடைகளினல் அவன் ஸந்தோஷ மடைவதைப் பார்த்துத் தான் ஸந்தோஷமடை வாளோ அதுபோல் எம்பெருமானின் உகப்பே எனக்கு உகப்பு' என்ற எண்ணத்துடன் அகங் கார மமகாரமாகிற களையற்றுக் கைங்கரியம் பண்ணுவதுதான் பரம புருஷார்த்தம். எம் பெருமான் நியமிக்க நாம் செய்யவேண்டும் என்பது, 'க்ரியதாம் இதிமாம் வத' என்று லக்ஷ்மணன் ராமனைப் பிரார்த்தித்ததிலிருந்து தெரிகிறது.

'நித்யஸூரிகளும் முக்தர்களும் பகவானு டைய அபிப்பிராயத்தை நேரில் தெரிந்து கொண்டு அதன்படி அவனுக்குக் கைங்கரியம் செய்கிருர்கள். ஸம்ஸாரத்தில் அலைந்து கொண்டிருக்கும் நம் போல்வார் எம்பெருமானு டைய அபிப்பிராயத்தை அறிய முடியாதே?' என்ருல், ஸம்ஸாரத்தில் எம்பெருமானின் திரு வுள்ளத்தை வெளியிடுபவை சாஸ்திரங்கள். 'சாஸ்திரங்கள் என் ஆஜ்ஞைகள். அதன்படி நடக்கவேண்டும். அவற்றை மீறி நடந்தால் அவன் என்னுடைய பக்தனுகிலும் எனக்குத் துரோகி' என்கிருன் பகவான். ஆகையால் இந்த லோகத்தில் சாஸ்திரங்களைக் கொண்டு எம்பெருமானுடைய அபிப்பிராயத்தை அறிந்து, அதன்படி கைங்கர்யம் செய்வதுதான் சிறந்தது. சாஸ்திர விதிகளைப் புறக்கணித்து நம் மனம் போன போக்கில் பகவானுக்குக் கைங்கரியம் என்ற பெயரால் காரியங்களைச் செய்தால் எம்பெருமான் திருவுள்ளம் உகக் காமற் போவதுடன் அவனுடைய நிக்கிரகமும் நமக்கு ஏற்படும்.

பகவான் நமக்கு ஸ்வாமி. அவனுக்கு நாம் தாஸர்கள். இந்த ஸம்பந்தம் ஒழிக்க ஒழியாது. ஸர்வசக்தனன எம்பெருமானலும் மாற்ற முடியாத நித்திய ஸம்பந்தம் இது. 'நாம்தாஸர்' என்ற நம் ஸ்வரூபத்துக்கேற்ப எம்பெருமானுக் குக் கைங்கரியம் செய்யப் பிராப்தர்களாகிறோம். 'இதைச் சாஸ்திரம் விதிக்கிறபடியால் இந்தக் கைங்கர்யத்தைச் செய்து தீரவேண்டும்' என்ற கடமையுணர்ச்சியுடனே, 'இது நம் தலைவிதி' என்ற வெறுப்பு உணர்ச்சியுடனே இந்தக் கைங்கரியத்தைச் செய்யத் தேவையில்லை. பதிவிரதை பரம குணவானன பர்த்தாவுக்குப் பரமப் பிரீதியுடன் எப்படிக் கைங்கரியம் செய் வாளோ அதுபோல், கெட்ட குணங்கள் இல் லாதவனும், பரம கல்யாண குணங்களுடன் கூடியவனும், அத்யாச்சர்யமான திவ்யமங்கள விக்கிரகத்தை உடையவனும், இகலோகம் பரலோகம் ஆகிய இரண்டு லோகங்களையும் தன் ஸங்கல்பத்தினல் ஆளும் பரம ஐச்வர்யத்தை உடையவனுமான பரம புருஷனுக்குப் பரமப் பிரீதியுடன் அவனுடைய குணங்களுக்குத் தோற்றுக் கைங்கரியம் செய்யத் தோன்றும். இந்தப் பரம புருஷனை அநுபவிக்க அநுபவிக்க ஆராத அமுதமாக இருக்கும். அந்த அநுபவப் பெருக்கு வெள்ளமெடுத்து ஓடி அவனுக்குக் கைங்கரியம் செய்தல்லது தரிக்காத நிலையை உண்டாக்கிவிடும்.

ஏரி நிரம்பினல் கலங்கல் வழிகிறது. அநுப வம் முதிர்ந்தால் கைங்கரியம் தானே வருகிறது. கைங்கரியம் செய்ய முடியாமற் போனலோ, கைங்கரியத்தை இழக்க நேரிட்டாலோ ஸகல ஐச்வர்யங்களையும் பறிகொடுத்தவன் நிலையில் நின்று துள்ளும்படியாக ஆகிவிடும். குணநிகன யிற்றே அவன், குணஸாரத்தை அறிந்தவன யிற்றே இவன். பசியுள்ளவனுடைய வயிற்றுச் சோற்றைக் கையிலிருந்து பறித்தால் என்ன பாடு படுவானே அதுபோல். பகவானுடைய கைங்கரியத்தை இழந்தானுகில் இவன் படும் பாடு சொல்லத் தரமன்று. இவனுக்கு உண் ணும் சோறும் பருகும் நீரும் தின்னும் வெற் றிலையும் எல்லாம் கண்ணன். இவனுக்குத் தாஸ்யம்தான் உணவு. தன் ஸ்வரூபத்தை

உள்ளபடி அறிந்து, தான் எம்பெருமானுக்குத் தாஸன், இதரர்களுக்குத் தாஸனல்லன் என்ற துணிவு ஏற்பட்டவுடன், இதர தேவதைகளுக்கோ மற்றுமுள்ள இதர மனுஷ்யர்களுக்கோ ஆட்பட்டு இவன் தாஸ்யத்தைச் செய்யமாட்டான். 'அந்நியர்களுக்குச் செய்யும் அடிமைத் தொழில் நரகத்துக்கு ஸமானம்' என்கிறார் ஸ்ரீஸ்வாமி தேசிகன். 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்' என்று ஆழ்வார் படியில் நின்று எம்பெருமானுக்கு ஸர்வ காலங்களிலும் ஸர்வ தேசங்களிலும் ஸர்வ அவஸ்தைகளிலும் அவன் திருவுள்ளப்படி கைங்கரியம் செய்யப் பிராப்தர்கள் நாம்.

அவன் திருவுள்ளப்படி கைங்கரியம் செய்வதுதான் நமக்குப் புருஷார்த்தம் என்கிறபடியால், அவன் திருவுள்ளத்தை ஆராய்ந்தால் அவனடியார்களான ஆசார்யர்களுக்கும் பாகவதோத்தமர்களுக்கும் கைங்கரியம் செய்வது அவனுக்குப் பரமப் பிரீதியைத் தரும் என்று ஏற்படுகிறது. இந்த ஆசார்ய பாகவத கைங்கரியத்தைத்தான் பகவானுடைய கைங்கரியத்தின் எல்லை என்கிறது. இந்த எல்லை நிலத்தைக் கரம்பு போடாமல் பாதுகாத்தால்தான், உள்ளபடி நிலங்கள் பாழாகாமல் நன்றாகப் பயிராகும். ஆகையால், பகவானுடைய கைங்கரியத்தைக் காட்டிலும் பாகவத கைங்கரியம் விசேஷம். அதிலும் ஆசார்ய கைங்கரியம் பரம விசேஷம். ஆசார்யர்கள் திறத்தில் பண்ணும் கைங்கரியங்களைப் பகவான் தன்னிடத்தில் பண்ணும் கைங்கர்யங்களாகவே எண்ணி மகிழ்கிறான். 'பகவானுக்கும் பாகவதர்களுக்கும் ஒரே ஸமயத்தில் கைங்கரியம் பண்ண நேரிட்டால் பகவத் கைங்கரியத்தை விட்டுப் பாகவத கைங்கரியத்தில் ஈடுபடு. பாகவத கைங்கரியமும் ஆசார்ய கைங்கரியமும் ஒரே சமயத்தில் நேர்ந்தால் பாகவத கைங்கரியத்தை விட்டு ஆசார்ய கைங்கரியத்தைச்செய்' என்று சாஸ்திரம் சொல்லுகிறது. இந்த அர்த்தத்தை ஸ்ரீஸ்வாமி தேசிகன் ரஹஸ்யரத்நாவளி ஹ்ருதயம் என்ற ரஹஸ்யத்தில் ஸாதித்துள்ளார்.

பரதனன்றி வேறொருவரை அறியான் சத்துருக்கனன், நம்மாழ்வார் அல்லது வேறொரு தெய்வம் அறியார் மதுரகவிகள். மதுரகவிகள், ஸ்ரீதேவாதிராஜனின் கரிய கோலத் திருவுருக் கண்டதுகூட, அவருக்கு (மதுரகவிகளுக்கு) உத்தேச்யரான நம்மாழ்வார் அந்த அமரர்களதிபதியின் அடியிணைகளை அடிபணிந்து உஜ்ஜீவித்தபடியாலே. ''ஸ்ரீபாஷ்யகாரர் ஸேவிக்காத பெருமாள் பெரியபெருமாளாக இருந்தாலும் தேவையில்லை'' என்று ஒதுங்கிப் போன கூரத்தாழ்வான் விருத்தாந்தத்தையும் இங்கு நினைப்பது. தூப்புல் வேதாந்ததேசிகன் பேரருளாளனைப் புரட்டாசித் திருவோணத்தன்று மங்களாசாஸனம் பண்ணிவிட்டுத் திரும்பும்போது, அனைவரையும் தன் அழகால் ஆகர்ஷிக்கும் அருளாளன் அருளைப் பாவித்துக் கொண்டு அசையாமல் நிற்க, அந்த மாலை விட்டு ஆசார்ய ச்ரேஷ்டரான தூப்புல்மாலை அனைவரும் பின்பற்றுவது இந்த அரிய சாஸ்திரார்த்தத்தை இன்றும் அநுஷ்டான முகத்தால் நன்கு புலப்படுத்துகிறது.

பாகவதர்களுக்குள் ஒருவருக்கொருவர் கைங்கரியம் செய்துகொள்ள நேரிடும்போது மிகவும் வாஞ்சையுடன் செய்யப் பிராப்தம். பாகவத கைங்கரியம் செய்யும்போது மனத்தில் ஒரு களங்கமும் இல்லாமல் செய்ய வேண்டியதுடன் நம்மை அவர்கள் விற்கவும் வாங்கவும் படியான நிலையில் நம்மை ஆக்கிக் கைங்கரியம் செய்ய வேண்டும். 'கேசவா புருடோத்தமா கிளர்சோதியாய் குறளா என்று பேசுவார் அடியார்கள் எம் தம்மை விற்கவும் பெறுவர்களே' என்கிறார் பெரியாழ்வார். ஆகையால் பகவத் பாகவத ஆசாரிய கைங்கரியமே உத்தரோத்தரம் நமக்கு உபஜீவ்யம்.










திருக்கழுக்குன்றம் வேதகிரீசுவரர் கோயில் திருப்பணித் துவக்கவிழாவில், தமிழக முதல்வர் மாண்புமிகு கலைஞர் திரு. மு. கருணாநிதி அவர்களை வரவேற்றுச் சிவாசாரியப் பெருமக்கள் வெள்ளிக் கோபுரச் சின்னம் வழங்கிச் சிறப்பித்தலும், நமது அறநிலைய ஆணையர் திரு. கே. எஸ். நரசிம்மன், B.A., B.L., I.A.S. அவர்கள் உரை நிகழ்த்துதலும் (29—4—71)





தஞ்சை மாவட்டம் திருத்துறைப்பூண்டி பிறவி மருந்தீசுவரர் கோயிலில், ஸ்ரீ மங்களநாயகி திருமண மண்டபத்தைத் தமிழக அரசின் நலத்துறை அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் திரு. க. அன்பழகன், M.A. அவர்கள் திறந்து வைத்தல் (13-4-71).

Published by the Commissioner, Hindu Religious and Charitable Endowments (Admn.) Dept., Madras-34
Editor: N. R. MURUGAVELL, M.A., M.O.L.